



மன்னார்குடி அருள்மிகு இராஜகோபாலசுவாமி ஆலயத் திருக்குட நீராட்டு விழா அண்மையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவி அவர்கள் இவ்விழாவிற்கு வருகைதந்து சிறப்பித்தார்கள் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு நடேசன் பால்ராஜ் அவர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டார்கள்.

முகப்பு :

அருள்மிகு திருப்பதி - திருமலை வெங்கடாசலபதி அருட்கோலம்.

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி நெடுஞ்சாலை,
சென்னை—600 043,
தொலைபேசி எண்: 8279407

ஆசிரியர் :
கவிஞர் டாக்டர் **த. அமிர்தலிங்கம்,** M.A.,Ph.D.

| மாலை : 37 | திருவள்ளுவர் ஆண்டு 2026 யுவ ஆண்டு வைகாசி-ஆனி 1995 மே-ஜூன் விலை ரூ. 6—00 | மணி : 5 & 6 |
|---|---|---|

## திருக்கோயில் வாசகர்களுக்கு அறிவிப்பு

அன்பு வாசகர்களே? வணக்கம்,

திருக்கோயில் திங்கள் இதழின் உறுப்பினர்களாகச் சேர விருப்பம் உள்ளவர்கள்.

உயர்திரு **ஆணையர்** அவர்கள்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை-600 034.

என்ற முகவரிக்கு பணவிடை அல்லது வங்கி வரைவோலை மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**சந்தா விவரம்**

| | | | |
|---|---|---|---|
| அரை ஆண்டு | .. | ரூ. | 18-00 |
| ஓர் ஆண்டு | .. | ரூ. | 36-00 |
| ஆயுள் | .. | ரூ. | 300-00 |

சந்தாதாரர்கள் முழுமுகவரியைத் தெரிவிக்க வேண்டும், முகவரியில் மாற்றம் இருப்பின் உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

## பொருளடக்கம்

அறநிலையத்துறையின்

# நான்காண்டுச் சாதனைகள்

மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்

**திருமிகு நடேசன் பால்ராஜ் அவர்கள்**



மாண்புமிகு தமிழக முதல்வர் இதய தெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்களின் பொற்கால ஆட்சியின் நான்காண்டு சாதனைகள் அளவிடற்கரியவை.

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்றோர் பழமொழி உண்டு.

நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்ற ஆன்மீக நெறிகளுக்கும், தொன்மை வாய்ந்த கலாச்சாரத்திற்கும் நமது திருக்கோயில்களே சான்றாகும். இந்தத் திருக்கோயில்கள் அனைத்தையும் சீரோடும் சிறப்போடும் பராமரிக்க வேண்டும் என மாண்புமிகு தமிழக முதல்வர் நம் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள்.

தமிழ்நாடு திருக்கோயில்களின் நிர்வாக மேம்பாட்டைக் கருதி, திருக்கோயில் நிர்வாக வாரியம் ஒன்று அமைக்கப்பட்டுச் செயல்பட்டு வருகிறது. மேற்படி நிர்வாக வாரியத்தால், மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவியால் ரூபாய் ஒரு இலட்சத்திற்குக் குறைவான வருமானமுள்ள திருக்கோயில்களுக்கு அறங்காவலர்கள் நியமித்தல் மற்றும் இதரப் பணிகளைச் செம்மையுற நடத்த 19 மாவட்டங்களிலும் மாவட்டக் குழுக்கள் நியமிக்கப்பட்டன. அதன்படி இதுவரை 19478 திருக்கோயில்களில் 38642 அறங்காவலர்கள் நியமிக்கப்பட்டு விட்டனர்.

20 ஆண்டுகளுக்கு முன்பாகக் களவு போன புகழ்பெற்ற பத்தூர் அருள்மிகு நடராஜர் திருவுருவச்சிலை தமிழ்நாட்டிற்கு மீட்டுத் திருப்பிக்கொண்டு வரப்பட்டது. மேற்படி திருக்கோயிலை ரூ. 7 இலட்சம் செலவில் புதுப்பித்து 3-9-1993-ல் குடமுழுக்கு விழா சீரும் சிறப்புமாக நடத்தப்பட்டது. மற்றும் நித்திய பூஜை நடத்த ரூ. 3 இலட்சம் வைப்பு நிதி ஏற்படுத்தி அதன் வட்டியைக் கொண்டு நித்திய பூஜைகள்-பராமரிப்புச் செலவுகள் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

திருக்கோயில்களில் உள்ள உலோகத் திருமேனிகள் சரியானபடி பாதுகாக்கப்பட வேண்டும் என மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள். எனவே நாகை காயிதேமில்லத் மாவட்டம்-திருவாரூரில் உள்ள உலோகத் திருமேனிகள் பாதுகாப்பு மையம் ரூ. 9 இலட்சம் செலவில் குளிர் சாதன வசதி செய்யப்பட்டது. மேலும் ரூ. 5 இலட்சம் செலவில் 'ஜெனரேட்டர்' ஒன்றும் அங்கே அமைக்க அனுமதிக்கப்பட்டது. ரூ. 1.60 இலட்சம் வைப்புநிதி ஏற்படுத்தி, முறைப்படி பூஜையும் செய்யப்பட்டு வருகிறது.



வேத ஆகமங்கள் முறையாகப் பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்றும் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும் மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள். தமிழகத்தில் முதன்முறையாக வேத ஆகமங்களைக் கற்றுச் சிறப்புறும் பொருட்டு, வேத ஆகமக்கல்லூரி நிறுவிட அறிவிக்கப்பட்டு, திருச்சிராப்பள்ளி நகர், கம்பரசம்பேட்டையில் 9.48 எக்டேர் நிலம் அறநிலையத்துறைக்கு அளிக்கப்பட்டு உள்ளது. அர்ச்சகர்களுக்குப் புத்தொளிப் பயிற்சித் திட்டம் அறிவிக்கப்பட்டது. உபரி நிதியுள்ள திருக்கோயில்களிலிருந்து நிதிமாற்றம் செய்து ரூ. 8 இலட்சம் நிதி ஏற்படுத்தி மாநிலத்தில் 10 இடங்களில் அர்ச்சகர்களுக்குப் புத்தொளிப் பயிற்சித் திட்டம் வழங்கும் திட்டம் நடைபெற்று வருகிறது.

இத்திட்டத்தின் முதற்கட்டத்தில் 346 அர்ச்சகர்கள் பயன் பெற்றுள்ளனர். 15-12-1993-ஆம் தேதி முதல் 2-ஆம் கட்டமாக 380 அர்ச்சகர்கள் பயிற்சி பெற்றனர்.

ஒரு காலப் பூசைகூட நடத்திட வசதியற்ற நலிந்த பல திருக்கோயில்களில், ஒரு காலபூசைத் திட்டம் தொடர்ந்து நடைபெற, மாண்புமிகு தமிழக முதல்வர் இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால் ஒரு காலப் பூசைத் தொடர்த் திட்டம் ஏற்படுத்தப்பட்டது

இத்திட்டத்தின்படி நலிவுற்ற திருக்கோயில்கள் ஒவ்வொன்றுக்கும் வைப்பு நிதி ரூ. 5,000-ஐ அரசே முதலீடு செய்யும். இந்த முதலீட்டிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு மாதந்தோறும் ஒரு கால பூஜை நடத்தப் பெறும். இத்திட்டத்தின் கீழ் பயன்பெறப் பொதுமக்கள் வைப்புநிதியில் 10-இல் ஒரு பாகமான ரூ. 2,500-ஐ நன்கொடையாகச் செலுத்தினால், அரசு மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் திருக்கோயில் திருப்பணி மற்றும் பராமரிப்பு நிதி வட்டியிலிருந்து ரூபாய் 22,500 வழங்கும் என அறிவிக்கப்பட்டு, நன்கு விளம்பரம் செய்யப்பட்டது. இத்திட்டத்தின் கீழ் மொத்தம் 6,231 திருக்கோயில்கள் பலனடைய வழி வகை செய்யப்பட்டுள்ளது. இதுகாறும் 5,055 திருக்கோயில்கள் பயன் பெற்றுள்ளன.

திருக்கோயில்களில் திருப்பணிகள் முறையாக நடைபெற வேண்டுமென மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள். அதன்படி கடந்த நான்கு ஆண்டுகளில் 303 கிராமப்புறத் திருக்கோயில்களுக்குத் தலா ரூ. 25,000 வீதம் நிதி வழங்கப்பட்டுள்ளது.

பொது நல நிதியிலிருந்து 149 திருக்கோயில்களுக்கு 65.74 இலட்சமும், மாண்புமிகு



முதலமைச்சர் அவர்களின் திருக்கோயில் திருப்பணி மற்றும் பராமரிப்பு நிதியிலிருந்து ரூபாய் 163.98 இலட்சமும் என்ற வகையில் 57 திருக்கோயில்களுக்கு நிதி அளிக்கப்பட்டுள்ளது.

சென்னை, மயிலாப்பூரில் உள்ள அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில் திருக்குளத்தில் 1988-ஆம் ஆண்டிலிருந்து போதிய நீர் இன்மையால் தெப்பத் திருவிழா நடத்த இயலாத நிலை இருந்தது. அங்கே தெப்பத் திருவிழாவினை நடத்துவதற்கு மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்களின் ஆணையின்படி திட்டம் தீட்டி ரூ. 35 இலட்சம் செலவில் திருக்குளத் திருப்பணி வேலைகள் செய்து குளத்திற்கும் தண்ணீர் தேக்கி ஐந்து ஆண்டுகளுக்குப்பின் 1994-ஆம் ஆண்டில் முதன்முதல் தெப்பத் திருவிழா நடத்தப்பட்டது. அதைத்தொடர்ந்து தெப்பத் திருவிழா ஆண்டுதோறும் நடத்தப் பட்டு வருகிறது.

புகழ்பெற்ற இராமேஸ்வரம் அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில் அமைந்துள்ள தீவினை அழகுபடுத்தவும், அங்கு வருகை தரும் பக்தர்களுக்கு அனைத்து வசதிகளை ஏற்படுத்தி தரவும் ஒருங்கிணைந்த திட்டம் ஒன்று செயல்படுத்தப்பட்டு வருகிறது.

திண்டுக்கல் அண்ணா மாவட்டத்தில் உள்ள பழநி, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழநி குன்றின்மீது அமைந்துள்ளது. இத்திருக்கோயிலைச் சுற்றி அமைந்துள்ள மலைப்பகுதி, மலை அடிவாரம் மற்றும் அதன் சுற்றுப்புறங்கள் ஆகியவற்றை அழகுபடுத்தவும் அங்கு வருகை தரும் பக்தர்களுக்குத் தேவையான வசதிகளை ஏற்படுத்தவும், ஒருங்கிணைந்த திட்டம் ஒன்று செயல்படுத்தப்பட்டு வருகிறது.

இந்த அரசு பொறுப்பேற்றது முதல், 303 திருக்கோயில்களில் குடமுழுக்கு விழாக்கள் நடை பெற்றுள்ளன.

சென்னை, நேஷனல் தியேட்டர் நிறுவனத்தின் சார்பாக நடிகர் திரு ஆர்.எஸ். மனோகர் சைவ மதத்தைச் சார்ந்த 63 நாயன்மார்களில் ஒருவரான திருநாவுக்கரசர் வாழ்க்கையை விளக்கிக்காட்டும் நாடகத்தினைத் தயாரிக்க நிதி வசதியுள்ள திருக்கோயில்களிலிருந்து ரூ. 5 இலட்சம் நிதி வழங்கப்பட்டது.

தஞ்சை மதுரை மாவட்டத் திருக்கோயில்களை இணைத்து 'உலா ரதம்' எனப்படும் இரண்டு பேருந்துகள் சுமார் ரூ. 40 இலட்சம் செலவில் மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்களின் ஆணையின்படி வாங்கப் பட்டு, சுற்றுலாத்துறையிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளது. இந்த உலா ரதம் விரைவில் அம் மாவட்டங்களில் பக்தி உலா வரும்.

மாண்புமிகு தமிழக முதல்வர் இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள் பொறுப்பேற்றப் பிறகு, 40 திருக் கோயில்கள் சார்பாக சிந்தை குளிர்விக்கும் நந்தவனம் அமைக்கப்பட்டது.

மதுரை, அருள்மிகு மீனாட்சியம்மன் திருக்கோயில் ஆயிரங்கால் மண்டபம் ரூபாய் 10 இலட்சம் செலவில் புதுப்பிக்க மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள் ஆணையின் படி முடிக்கப்பட்டது.

ஆழ்வார்களால் பாடல் பெற்று, அன்று நம்மக்கள் வழிபட்ட திருத்தலங்கள் நம்முடைய காலத்தில் அழியும் நிலைக்கு வந்தன. எனவே, மாண்புமிகு தமிழக முதல்வர் இதய தெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தாமிரபரணி தீரத்தில் உள்ள நவ திருப்பதிகளிலும் ரூ. 2.4 கோடி செலவில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்ய ஆணையிட்டுள்ளார்கள்.

இதன் முதற்கட்டமாகத் தென் திருப்பேரையில் உள்ள அருள்மிகு மகரநெடுங் குழைக்காதர் திருக்கோயிலில் திருப்பணிகள் முடிக்கப்பட்டு கும்பாபிஷேகம் கண்டது. பிற திருத்தலங்களிலும் திருப்பணிகள் வேகமாக நடைபெறுகின்றன. இங்ஙனம் ஒன்பது திருத் தலங்களும் ஒருங்கிணைந்திருப்பது நாட்டில் வேறெங்கும் இல்லாத சிறப்பாகும்.

திருக்கோயில்களில் அனைத்துப்பணி நிலைகளிலும் கூடுதல் இடங்கள் வழங்க மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள்.

இதேபோன்று திருக்கோயில்களில் பணியாற்றும் அனைத்துப் பணியாளர்களுக்கும் மருத்துவப்படி வழங்க மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் ஆணையிட்டுள்ளார்கள்,

வருங்காலச் சந்ததியினருக்கு இந்த மண்ணின் பண்பாடு, கலை மற்றும் கலாச்சாரம், இதிகாசம், புராணங்கள் ஆகியவற்றில் பயிற்சி அளிக்கும் பொருட்டு, மாண்புமிகு தமிழக முதல்வர் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவி அம்மா அவர்களால் 'ஆன்மீகக் கல்வித் திட்டம்' ஒன்று அறிவிக்கப்பட்டு, மேற்படி ஆன்மீகக் கல்வித் திட்டம் 14-4-1995-இல் இம் மாநிலத்தில் 153 திருக்கோயில்களில் தொடங்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் பயிற்சி பெற, 2415 சிறுவர்களும் 1,611 சிறுமியர்களும் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.



# அனைத்தும் சிவனே!

திருமிகு ச. சாவர்க்கர், ஐ.ஏ.எஸ்.,

ஆணையாளர்,

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை—600 034

கணக்காய் இருந்தால் காட்சி தருவாய் நீயே
கண்ணுக்குத் தெரியாமல் ஆட்சிசெய்வாய்நீயே
விண்ணுக்கு மேலும் இருக்கின்றாய் நீயே
மண்ணுக்குக் கீழும் மறைந்துள்ளாய் நீயே. 1.

அனுபவம் பெறுவதற்கு ஆட்டுவிப்பாய் நீயே
அனைத்தையும் பெற்றவுடன் கூட்டுவிப்பாய் நீயே
மூர்க்கனுக்கே காலமென்று தோற்றுவிப்பாய் நீயே
முற்றிலுமே தவறு என அறியவைப்பாய் நீயே. 2.

பொறுமைக்கு ஆதரவு காட்டுகின்றாய் நீயே
பொறாமைக்குப் பாடம் புகட்டுகின்றாய் நீயே
வறுமைக்குக் காரணத்தை மறைக்கின்றாய் நீயே
மறுமைக்குக் காரணமாய் இருக்கின்றாய் நீயே. 3.

பிறந்ததும் இறக்க வைப்பாய் நீயே
இறந்தும் பிறக்க வைப்பாய் நீயே
இறந்த பின்பும் இறக்க வைப்பாய் நீயே
துறந்தபின்பே பிறப்பு ஒழிப்பாய் நீயே. 4.

பிறந்த இடம் உனக்கில்லையெனத்தெரிந்தவன் நீயே
பிறந்தோர்க்குப் புவனத்தைத் தந்தவன் நீயே
சிவஞான போதத்தைச் சொன்னவன் நீயே
அஞ்ஞானம் போக்கவல்ல சிவபுரத்தரசன் நீயே 5.

அதிபத்தருக்கு அருள்கொடுத்த அப்பன் நீயே
எறிபத்தருக்கு இருள்கெடுத்த இறைவன் நீயே
தேரைக்கும் அமுதளிக்கும் முதல்வன் நீயே
நாரைக்கும் முக்தியளித்த முக்கண்ணன் நீயே. 6.

பிறைசூடியாகிப் பித்தனாகி சோதியானவன் நீயே
புனல் சூடியாகி கங்கைதனை மணந்தவன் நீயே
திருவெம்பாவைக்குப் பாட்டுடைத் தலைவனும் நீயே
திருக்கோவைதனைப் பாடவைத்த வள்ளலும் நீயே. 7.

அனாதியானாலும் புனிதவதிக்குப் புதல்வன் நீயே
ஏனாதிநாதருக்கு வீடுபேறுதந்த முதல்வன்நீயே
காலனைக் காலால் உதைத்தவன் நீயே
காலால் முயலகனை வதைத்தவன் நீயே. 8.

திருமூர்த்தியில்ஒருமூர்த்தியாக இருப்பவன்நீயே
மும்மூர்த்திகளில் முதல்வனாக ஆனவன் நீயே
அனுசூயையை சோதித்தவருள் ஒருவன் நீயே
அணுவளவாக ஆக்கப்பட்ட சிறுவன் நீயே. 9.

பரஞ்சோதியைச் சிறுத்தொண்டனாக ஆக்கியவன் நீயே
பெருஞ்சோதியாகிப் பேரின்பம் விளைவித்தவன் நீயே
அருட்பெருஞ்சோதியாக வடலூரில் ஒளிர்பவன் நீயே
அய்யப்பசோதியாக சபரியில் மிளிர்பவன் நீயே. 10.

காஞ்சி ஸ்ரீ தொண்டை மண்டல ஆதீனம் கயிலைப் புனிதர் தவத்திரு

# ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகளுக்கு

## அஞ்சலி...



திருக்கோயில் நிர்வாக வாரிய உறுப்பினராக விளங்கிய காஞ்சி ஸ்ரீ தொண்டை மண்டல ஆதீனம் கயிலைப் புனிதர் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அண்மையில் முத்திப்பேறு பெற்றார்கள். மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு நடேசன் பால்ராஜ், மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர் திருமிகு கா. ப. பட்டாபிராமன், அறநிலையத் துறை ஆணையாளர் திருமிகு ச. சாவர்க்கர், இ.ஆ.ப., ஆகியோர் சுவாமிகளுக்கு அஞ்சலி செலுத்தினர்.



வானமும் மண்ணும் எல்லாம்

# வணங்குபேய் வடிவம் ஆனார்

பேராசிரியை சுமதி குமாரசாமி அவர்கள்
துணை இயக்குநர், ( செவிலியர் )
மருத்துவக் கல்வி இயக்ககம், எழிலகம், சென்னை - 600 005.

இறைவனைத் 'தாயுமிலி தந்தையிலி' என்பார்கள். தாயும் தந்தையுமற்ற இறைவனே 'அம்மா' என்று அன்போடு அழைத்துச் சிறப்பித்த ஒப்பற்ற நாயனாரே இப்பொழுது நாம் காணப் போகும் காரைக்கால அம்மையார் ஆவார்.

அடியார் பெருமையை எடுத்துரைக்க சேக்கிழார் பெருமான் ஒருவருக்குத்தான் ஆகுமே அன்றி, தேவர்களுக்கும் அது ஆகாத அருஞ்செயல் என்பார் உமாபதி சிவனார். அப்படிப் போற்றப்பட்ட சேக்கிழார் பெருமானே காரைக்கால் அம்மையின்பெருஞ்சீரைப் பரவத் தமக்கும் ஆகாது என்று கூறுகின்றார் என்றால் இவர்தம் பெருமையே பெருமை அல்லவா!

'எடுத்த புனல் வேணியினார் அம்மை என
மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவிய
தாண்டவத்திலவர்
எடுத்தருளும் சேவடிக் கீழ் என்றும்
இருக்கின்றாரை
அடுத்த பெருஞ்சீர் பரவல் ஆர்
அளவாயினதம்மா'

என்று சேக்கிழார் போற்றும் தாயான இறைவனுக்கும் தாயான காரைக்கால் அம்மையாரின் புனித சரித்திரத்தை இப்பொழுது காண்போம்,

மானவுணர்வோடு தருமமும் சத்தியமும் மறவாத வணிகர்கள் வாழும் வளமை பொருந்திய ஊர், கடற்கரைப் பட்டினமான காரைக்கால் ஆகும். காரைக்கால்வாழ் வணிகர்களில் தலைமைத் தனிச் சிறப்புப் பெற்றவர் தனதத்தனார். இத்தனதத்தனார் செய்த அளவிலாத் தவம் காரணமாக அவர் மனையில் திருமகளைப் போல் வந்து தோன்றுகிறார் புனிதவதியார். புனிதவதியார் என்பதுதான் காரைக்கால் அம்மையாரின் இயற்பெயர். 'நமசிவாய' என்ற பஞ்சாட்சரததைப் பாரினில் நிலைநிறுத்தத் தோன்றிய அம்மைக்கும் ஐந்தெழுத்தினாலேயே 'புனிதவதி' என்ற பெயரிட்டு வழங்கியது எவ்வளவு பொருத்தம் என்பதை எண்ணி மகிழுங்கள்.

'திருமடந்தை அவதரித்தாள் என வந்து
பொங்கியபேர் அழகுமிகப் புனிதவதியார்
பிறந்தார்''

என்று திருமகளே புனிதவதியாராக இப்புனித மண்ணில் அவதாரம் செய்ததாகக் கூறி உவக்கின்றார் நம் சேக்கிழார் பெருமான்.

புனிதவதியார் தெய்வக் குழந்தையாதலால், அக்குழந்தைக்கு நினைவுண்டான போதே, தெய்வப்பக்தியும் உடன் தோன்றிவிடுகிறது. அம்மா அப்பா என்று பேசத் தொடங்கும்போதே, அம்மையும் அப்பனுமான இறைவனையும் பாடத் தொடங்கிவிடுகிறார் புனிதவதியார். தளர்நடை பயிலும் போதும், மற்ற சிறுமிகளோடு மணல் வீடு கட்டி விளையாட்டுப் பயிலும் போதும் புனிதவதியாரின் சிந்தை முழுவதும் சிவநாமமே நிறைந்தும், சிறந்தும் விளங்குகிறது.

மழலைப் பருவத்திலேயே தம் மனதில் மகாதேவன் நிறைந்து விளங்கிய பக்தியை 'அற்புதத் திருவந்தாதி' நூலுள்.

'பிறந்துமொழி பயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்து நின்சேவடி சேர்ந்தேன்'

என்று அம்மையார் தாமும் பாடியிருக்க, சேக்கிழார் பெருமானும் அதை விவரித்து,

'வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந்
தருளியபின்
அணிகிளர்மெல் அடிதளர்வுற்று அசையும்
நடைப் பருவத்தே
பணிஅணிவார் சுழற்குஅடிமை பழகிவரும்
பாங்குபெறத்
தணிவுஇல்பெரு மனக்காதல் ததும்பவரும்
மொழி பயின்றார்''

'வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம்
புனைந்தாண்ட
அண்டர்பிரான் திருவார்த்தை அணையவரு
வனபயின்று
தொண்டர்வரில் தொழுதுதாதியர் போற்றத்
துணைமுலைகள்
கொண்டுநுசுப்பு ஒதுங்குபதம் கொள்கையினில்
குறுகினார்''

என்று பாடியுள்ளார்.



பிறக்கும்போதே திருமகள் போல் எழில் பெற்று விளங்கியவர் பருவம் வந்துற்ற நாளில் பேரழகுப் பெட்டகமாய்த் திகழ்ந்தார் என்பதைக் கூறவா வேண்டும்? நாகைப்பட்டினத்தில் வாழ்ந்திருந்த நிதிபதி என்பவன், தன் மகன் பரமதத்தனுக்கு புனிதவதியாரை மணம் பேசப் பெரியவர்களை அனுப்பி வைத்தான். மணம் பேசி முடிவு செய்யப்பட்டது. தனதத்தன், காரைக்காலிலேயே தம் மகள் புனிதவதிக்கும், பரமதத்தனுக்கும், மிகச் சிறப்பாகத் திருமணம் செய்து வைத்தார். திருமணம் வணிகர் குலமரபிற்கேற்ப செல்வச் சிறப்போடு நிகழ்ந்தது என்பதைச் சேக்கிழார் பெருமானும் விவரிக்கிறார். ஆயினும், புனிதவதியார்— பரமதத்தன் ஜோடிப் பொருத்தம் சரியாக அமையவில்லை என்பதைக் குறிப்பாகச் சுட்டவிழையும் சேக்கிழார்

'தளிர்அடிமென் நகைமயிலைத் தாதுஅவிழ்
தார்க் காளைக்குக்
களிமகிழ் சுற்றம் போற்றக் கல்யாணம்
செய்தார்கள்''

என்று காட்டுகிறார். பெண்மயிலுக்கு ஆண் மயிலை மணமுடிப்பதல்லவா பொருத்தம். புனிதவதி என்ற பெண்மயிலைப் பரமதத்தன் என்ற காளைக்குக் கல்யாணம் செய்து வைத்த காரணத்தால்மயில் காளையைக் கண்டு மிரளப் போகிறது என்ற குறிப்பையும் இப்பாடல் வரிகளில் சேக்கிழார் சுட்டியிருக்கும் சிறப்பினைக் காணலாம்.

'பெருகு திருமனையறத்தின் வேர்' என்று பெண்களைச் சிறப்பிப்பார் சேக்கிழார். வாழ்க்கைத் துணையாக அமையும் பெண்களால்தான் அன்பும், அறனும் அமைந்து இல்வாழ்க்கை பண்பும் பயனும் உடையதாக விளங்கும் என்பது தெளிவு.

காரைக்காலில் தம் கணவன் பரமதத்தனுடன் தனி மணவாழ்க்கை சிறப்புறநிகழ்த்திய புனிதவதியார், சிவபத்தி முன்னிலும் பொலிய சிவனடியார்க்கு உணவும், வேண்டிய பொருள்களும், நல்லாடைகளும் வழங்கி இல்லறத்தைச் செம்மையாகப் பேணினார் எனபதையும் சேக்கிழார் பெருமான்,

'ஆங்குஅவன்தன் இல்வாழ்க்கை அருந்துணை
யாய் அமர்கின்ற
பூங்குழலார் அவர்தாமும் பொருவிடையார்
திருவடிக்கீழ்
ஓங்கிய அன்புறுகாதல் ஒழிவின்றி மிகப்
பெருகப்
பாங்கில் வரும் மனைஅறத்தின் பண்புவழாமை
யில் பயில்வார்'

'நம்பர் அடியார் அணைந்தால் நல்லதிரு அமுது
அளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழும் துகிலும்
முதலான
தம்பரிவினால் அவர்க்குத் தகுதியின்வேண்டுவ
கொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக
ஒழுகும்நாள்''

என்று ஆர்வத்துடன் விவரிக்கின்றார்.

இவ்வாறு இவர்தம் இல்லறவாழ்வு இனிதே நிகழ்கின்றது.




இந்நிலையில் பரமதத்தன் கடையில் அமர்ந்து வணிகம் செய்து கொண்டிருந்த ஒரு நாள், அவனைக் காணவந்த நண்பர் ஒருவர், இருமாங்கனிகளைப்பரமதத்தனிடம்கொடுக்க, அவனும் அதை வாங்கி தன் மனைக்குப் பணியாளர் மூலம் அனுப்பி வைத்தான். அதே நாளில், சிவனடியார் ஒருவரும் பசியோடு பரமதத்தன் வீட்டிற்கு வந்தார். அடியாரின் தளர்ந்த நிலைகண்டு, அவரை உடன் அமுது செய்விக்க ஆர்வம் கொண்டார் புனிதவதியார்.

''வேதங்கள் மொழிந்த பிரான்மெய்த்
தொண்டர் நிலைகண்டு
நாதன்தன் அடியாரைப் பசிதீர்ப்பேன் என
நண்ணிப்
பாதங்கள் விளக்குநீர் முன்அளித்துப் பரிகலம்
வைத்து
ஏதம்தீர் நல்விருந்தா இன்னடிசில் ஊட்டுவார்'

'கறிஅமுது அங்கு உதவாதே திருவமுது கைகூட
வெறிமலர்மேல் திருஅனையார், விடையவன்
தன் அடியாரே
பெறல் அரிய விருந்து ஆனால் பேறு இதன்மேல்
இல்லை என்னும்
அறிவினராய் அவர்அமுது செய்வதனுக்கு
ஆதரிப்பார்''

மண்ணில் பிறந்தார் பெறும் பயன், மதி சூடும் அண்ணல் அடியாரை அமுது செய்விப்பது அன்றோ! இதனினும் பெறத்தக்க வேறு பேறு உண்டோ! என்று எண்ணிப் பதார்த்தங்கள் தயாராகாத அந்நிலையிலும் பசியால் வாட்டமுற்றுள்ள சிவனடியார்க்குத் திருவமுது படைக்கத்திருவுள்ளம் கொண்ட புனிதவதியார் தம் கணவனார் அனுப்பி வைத்த இரு மாங்கனிகளில் ஒரு மாங்கனியை அடியாருக்குப் பரிமாறி அவர்தம் பசிவருத்தம் தீர்க்கின்றார். வயதில் முதிர்ந்த அச்சிவனடியாரும் தம் பசிவருத்தம் தீர்ந்து, அம்மையாரை வாழ்த்தி விடைபெற்றுச் சென்று விடுகிறார்.

நண்பகலில் அமுதுண்ண தன் வீட்டிற்கு வந்து சேருகிறான் பரமதத்தன். அதற்குள் பதார்த்தங்களையும் தயார் செய்து, பசியோடு வந்த தம் கணவருக்கு முறைப்படியான உபசரணை செய்து உணவு பரிமாறுகிறார் புனிதவதியார். அடியாருக்கு அளித்து எஞ்சியிருந்த மற்றொரு மதுரநல் மாங்கனியையும் கணவனுக்குப் பரிமாறுகிறார் புனிதவதியார். மாங்கனியுடன் உணவை ருசித்துச் சாப்பிட்ட பரமதத்தன், 'இன்னொரு மாங்கனி இருக்குமே! அதையும் கொண்டுவந்து வை' என்று கேட்கிறான்.

மாங்கனி காரணமாக ஒரு திருவிளையாடலை மறுபடியும் நிகழ்த்த உளம்கொண்டு விட்டார் போலும் சிவபெருமான். அதனால் தானோ என்னவோ, 'அடியாருக்குப் படைத்து விட்டேன்' என்று கூற நாவெழாமல் புனிதவதியார் உள் அறைக்குப் போய் உளம் வருந்த, சிவபெருமானார் திருவிளையாடலால் அவர் தம் திருக்கரத்தில் தோன்றுகின்றது மாங்கனி ஒன்று.

'இனையது ஒரு பழம் இன்னும் உளதுஅதனை
இடுக என
அனையதுதாம் கொண்டுவர அணைவார்போல்
அங்கு அகன்றார்
'அம்மருங்கு நின்று அயர்வார் அரும்கனிக்கு
அங்கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்த இடத்து உதவும்
விடையவர்தாள்
தன்மனம்கொண்டு உணர்தலுமே அவர்
அருளால், தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்தது அதிமதுரக் கனி
ஒன்று''

மற்றொரு மாங்கனி கேட்கும் கணவனாருக்கு என்ன கூறுவது என்று கலங்கிய புனிதவதியார், கையில் அவர் வேண்டாமலும் சிவனருளால் ஒரு கனி வந்து சேர, மகிழ்வோடு



வந்து பரிமாறுகிறார் புனிதவதியார். இறைய ருளால் கிடைத்த தேமாங்கனியைச் சுவைக்கும் பரமதத்தன் சுவைவேறு பாட்டால், கனிவேறு-பாட்டையும் உணர்ந்துகொண்டு விடுகிறான்.

'முன்தரு மாங்கனி அன்று....
மூவுலகில் பெறற்கு அரிதால்
பெற்றது வேறு எங்கு?''

''எங்கிருந்து இக்கனி உனக்குக் கிடைத்தது! உண்மையைக் கூறிவிடு'' என்று புனிதவதியாரிடம் வினவுகின்றான்.

இறையருளால் இக்கனி வந்துற்றது எனக் கூறலாமா! வேண்டாமா! என மனம் மயங்குகிறார் புனிதவதியார். பின் நடந்ததை நடந்தபடி கூறுவதேநல்லது எனத் துணிந்து கறியமுது தயார் ஆகாத நிலையில் சிவனடியாருக்குத் திருஅமுது ஊட்டும்போது ஒருமாங்கனி படைத்ததையும், இப்போது இறைவன் அருளால் நறுமாங்கனி ஒன்று அவன் கைக்கு வந்து சேரத் தாம் அவர்க்குப் படைத்ததையும் கூறுகிறார் புனிதவதியார்.

இறையருளால் இரண்டாவது மாங்கனி கிடைத்தது என்பதைப் பரமதத்தன் நம்பிடவில்லை.

'ஈசனருள் எனக் கேட்ட இல் இறைவன்,
அது தெளியான்,
வாசமலர்த் திருவனையார் தமைநோக்கி,
மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் திருவருளேல்,
இன்னமும்ஓர்
ஆகஇல்கனி அவனருளால் அழைத்து அளிப்பாய்
எனமொழிலான்''.

பரமதத்தன் பரமன் திருவருளில் நம்பிக்கையின்றி, 'இனனொரு கனி வரவழைத்து தா! பார்ப்போம்'.என்று கூற பாவையார் மனம் கலக்கமுற்று வருந்துகிறார். மீளவும் உள் அறைக்குப் போய் 'கேளாமலே அருள் செய்த இறைவா! வேண்டத்தக்கது அறிவோய் நீ, வேண்ட முழுதும் தருவாய் நீ' இன்னொரு மாங்கனி நீர் தராவிடில், இறைவன் அருளால் இம்மாங்கனி கிடைத்தது என்று நான் கூறிய மொழி பொய்ம்மொழி ஆகிவிடும். ஆகவே, இன்னொரு மாங்கனி தாரும்'' என்று புனிதவதியார் வேண்டுகிறார். அருட்பெருங்கடலாகிய இறைவன் திருவருளால் அம்மையாரின் திருக்கரத்தில் மீண்டும் ஒரு மாங்கனி வந்து சேருகிறது. அதைப் பரமதத்தனிடம்கொண்டு வந்து கொடுக்கின்றார் புனிதவதியார். அதிசயத்தோடு அக்கனியை பரமதத்தன் வாங்கிப் பார்க்க, அத்தெய்வக்கனி அவன் கையிலிருந்து மறைந்துவிடுகிறது.

''பாங்கு அகன்று மனைவியார்
பணிஅணிவார் தமைப் பரவி
ஈங்குஇது அளித்து அருளீரேல்
என்உரை பொய் ஆம் என்ன
மாங்கனி ஒன்று அருளால் வந்து எய்துதலும்
மற்றதனை
ஆங்குஅவன் கைக் கொடுத்தலுமே
அதிசயித்து வாங்கினான்''.

"வணிகனும் தன்கை புக்க
மாங்கனி பின்கைக் காணான்.''

**(அடுத்த இதழில் நிறைவு பெறும்)**

# அருள்மிகு கூடலழகர் திருக்கோயில் வரலாறு

பேராசிரியர் இரா. அரங்கராஜன், எம்.ஏ.பி.டி.

## முன்னுரை

சங்கத் தமிழ் வளர்த்த மாநகராம் மதுரை தமிழோடு திருமால் நெறியினையும் போற்றி வந்த பெருமையுடையது. பாண்டிய மன்னர் பலர் திருமால் அன்பர்களாய்த் திகழ்ந்தனர்; திருமாலுக்குக் குன்றமன்ன கோயில்களையும் எழுப்பினர். அக்கோயில்களில் தலையாயது கூடல் அழகர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாகும். அதன் தொன்மை மேன்மைகளை இக் கட்டுரையில் காண்போம்.

## கிருதமாலா நதி

மதுரை நகரை அணி செய்வது வைகைப் பேராறு என்று தான் அறிந்து இருக்கிறார்கள். ஆனால் புராணங்கள் மற்றும் சங்க நூல்கள் மூலம் வைகையாறு இருபிரிவாகப் பிரிந்து மதுரை நகருக்கு மாலையிட்டது போல் பாய்ந்து சென்றது என்று தெளிவாகத் தெரிகிறது. அவற்றில் ஒரு பிரிவான கிருதமாலை கூடலழகரின் திருக்கோயிலுக்கு மிக சமீபத்தில் ஓடியது. கிருதமாலையின் இரு கரையிலும் வாழை மரங்கள் செழித்து வளர்ந்திருந்தன. அதனைக் கதலீவனம் என்று அழைத்தனர். அக் கதலீவனத்தினிடையில் தான் கூடலழகர் திருக்கோயில் வானோங்கி வளர்ந்து நின்றது.

கிருதமாலை நதி சமீபகாலம் வரை நீர்ப் பெருக்குடன் அகன்ற பரப்பளவில் ஓடிக்கொண்டிருந்தது.

கிருதமாலை நதியே வைகையினும், பழமையும் புனிதமும் பெற்று விளங்கியது. புண்ணிய நதிகளில் ஒன்று கிருதமாலை.

கிருதமாலை என்று பெயர் வந்ததற்குக் காரணத்தைக் கூடற் புராணம் கூறுகிறது.

'வேகமாதலின் வேகவதி என்றும்
மாகம் வாய்ந்ததனால் வையை என்றும்தார்
ஆகலால் கிருதமாலையதாம் என்றும்
நாகர் முப்பெயர் நாட்டு நதியரோ''

வேகமாகப் பாய்ந்து ஓடியதால் வேகவதி என்று அழைத்தனர். திருமால் பேருருவம் எடுத்துத் திரிவிக்கிரமனாக வளர்ந்து ஒரு திருவடியானது சத்தியலோகம் சென்றபோது நான்முகன் அத் திருவடியை விளக்கிய நீர் விண்ணிலிருந்து வீழ்ந்து வையகத்தைப் புனிதமாக்கியது. அக் காரணத்தால் அதனை வைகை என்று அழைத்தனர். அதனுள் ஒரு பிரிவு கூடலழகருக்கு மாலை அணிவிக்கப் பெற்றது போல் சென்றதால் அதனைக் கிருதமாலை என்று அழைத்தனர். இக்கிருதமாலையினையே வையை என்றும் அழைத்ததாக அறிகிறோம்.

''தார்முற்றியது போலத் தகைபூத்த
வையைதன்
நீர்முற்றி மதில் பொரூஉம் பகையல்லால்
நேராதார்
போர்முற்றொன்றறியாத புனல் சூழ்ந்த
வயலூரன்''

என்ற கலித்தொகைப் பாடல் (மருதக்கலி 2) கிருதமாலையைக் குறிப்பிடுகிறது. 'தார் முற்றியது போல' என்ற அடைமொழியின் தொடர் கிருதமாலை என்ற வடமொழியின் தமிழாக்கமே என்பது தெளிவு.

## சத்தியவிரதனும் மத்ஸ்யாவதாரமும்

முன் ஒரு யுகத்தில் சத்தியவிரதன் என்ற பாண்டிய மன்னன் கூடலழகரின் திருவடிகளில் பக்தி பூண்டிருந்தான். அவன் கூடலழகரைத் தியானம் செய்து கொண்டும் திருவாராதன தீர்த்தத்தையே பருகிக் கொண்டும் கிருதமாலையின் கரையிலேயே தவம் செய்தான். ஒரு நாள் அந்நதியில் ஜலதர்ப்பணம் செய்கையில் அவனுடைய அஞ்ஜலி ஜலத்தில் திருமால் மீனுருவாகத் தோன்றினான். மத்ஸ்யாவதாரம் எடுத்த நாராயணன் பாண்டிய மன்னனுக்கு அருமறைப் பொருள்களை உபதேசித்தான். இவ்வரலாறு ஸ்ரீமத் பாகவதத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இந்த ஸ்ரீமத்பாகவதம் பகவான் வியாசரால் இயற்றப் பட்டது என்பது நினைவிற் கொள்ளத்தகும்.

எனவே, எம்பெருமான் மத்ஸ்யாவதாரம் எடுத்த புராணப் பெருமை வாய்ந்த நதியின் கரையில் கூடல் மாநகர் விளங்குவதை அறியலாம். பாண்டிய மன்னர்களும்

திருமாலிடத்துக் கொண்ட பக்திப் பெருக்கால் மீன் உருவத்தைத் தம் கொடியிற் பொறித்துக் கொண்டு போற்றினர். பாண்டியர்களுக்கு இலச்சினையும் இரட்டை மீன்களே. கிருத மாலைக்கு மற்றொரு பெருமையும் பாகவ தத்தில் கூறப்பட்டிருக்கிறது. கிருதமாலை நதியாயும் பிரதேசத்தில் விஷ்ணு பக்தர்களான பெரியோர்கள் அவதரிக்கப் போகிறார்கள் என்று பாகவதம் தீர்க்க திருஷ்டியாகக் கூறி யிருக்கிறது. (கலிகாலத்தில் தமிழ்நாட்டில் அதிலும் பெரும்பாலும் தாமிரபரணி, கிருத மாலை, பாலாறு, பெரும் புகழ் பெற்ற காவேரி மேற்கு நோக்கிப் பாயும் ப்ரதீசி, ஸரஸ்வதீ ஆகிய நதிக் கரைகளில் ஆங்காங்கு நாரா யணனையே இலக்காகவும் எய்துவிக்கும் நெறி யாகவும் கொண்ட மகாத்மாக்கள் தோன்று வார்கள்). கிருதமாலை நதிதீரத்தில்எழுந்தருளி யிருக்கும் கூடலழகரின் திருவடிக்கண் மாறாத அன்பைப் பெற்றவராக விஷ்ணு சித்தரான பெரியாழ்வார் விளங்கப் போவதை பாக வதம் குறிப்பினால் உணர்த்துவதாகக் கொள்ள லாம்.

## கிருதயுகத்தில் கூடலழகர்

நான்முகக் கடவுளான பிரம்மாவின் மானச புத்திரரான சனத்குமாரர் ஸ்ரீமந் நாராயணனைத் திருக்கோயிலமைத்து அர்ச்சா ரூபியாகத் திருப்பிரதிஷ்டை செய்து வழிபடப் பெரிதும் விரும்பினார். அவருடைய விருப்பத் திற்கிணங்கத் தேவ சிற்பியான விசுவகர்மா பாண்டிய தேசத்தில் கிருதமாலா தீரத்தில் கதலீவனத்தின் நடுவில் நெடிதோங்கி நிற்கு மாறு அஷ்டாங்க விமானத்தை நிர்மாணம் செய்து தந்தான். அவ்விமானத்துள் சகல பரிவாரங்களுடனும் ஸ்ரீமந் நாராயணனும் பிராட்டிமாருடன் எழுந்தருளி வீற்றிருந்தான். இக்கிருதயுகத்தில் தான் நீலகண்டனான சிவ பெருமான் அஷ்டாங்க விமானத்தின் ஈசான்ய திசையில் ஒரு பொற்றாமரைக் குளத்தினருகே உமாதேவியாரைக் கூடுவதற்காகக் கடுந்தவம் செய்தான். அவருடைய தவத்தைப் பாராட்டி கூடலழகரும் சிவபிரானுக்குச் சேவையருளி னார்; ஸப்தரிசிகளை ஏவி உமாதேவியாரை சிவபிரான் திருமணம் செய்து கொள்ளத் துணையிருந்தார். பார்வதி கல்யாணத்தை நடத்திய பெருமை கூடலழகரையே சேரும்.

## திரேதாயுகத்தில் கூடலழகர்

பிருதுச் சக்ரவர்த்தி என்ற மன்னவன் ஒருவன் தனது தவ வலிமையால் தெய்வீக விமானம் ஒன்றிலேறி எல்லாத் தலங்களுக்கும் சென்று வழிபட்டு வந்தான். ஒரு சமயம் அவனது விமானத்தின் நிழல் அஷ்டாங்க விமானத்தின் மீது விழுந்தது. உடனே விமானம் மேலே பறக்க இயலாமல் தரையில் இறங்கி விட்டது. அதிர்ச்சி அடைந்த பிருதுச் சக்ரவர்த்தி அஷ்டாங்க விமானத்தைக் கண்டு அதனை வலம் வந்து வழிபட்டான். அஷ் டாங்க விமானத்தில் கோயில் கொண்டிருந்த கூடலழகனான சுந்தரராஜனைத் திருவடி தொழுது பல வருடங்கள் கூடலில் வாழ்ந்து அழகருக்குத் திருப்பணிகள் செய்து அதன் பல னாகப் பரமபதமான வைகுந்தமாநகர் சென்ற டைந்தான்.

## துவாபரயுகத்தில் கூடலழகர்

அம்பரீஷன் என்ற மகாபக்தன் ராஜ ரிசியாகத் திகழ்ந்தான். மகாவிஷ்ணு பக்த னான அவனுடைய பெருமை அளக்கவொண் ணாதது. அவன் பகவான் கோயில் கொண்ட சேத்திரங்களுக்குச் செல்லுவதில் கால்களை யும், பகவானுடைய பாதங்களில் வந்தனம் செய்வதில் தலையையும் பயன்படுத்தி பரம வைராக்கியசாலியாகத் திகழ்ந்தான். விஷ்ணு பக்தியால் துர்வாஸரையும் வென்ற பெருமை படைத்திருந்தான். அவ்வம்பரீஷ மன்னன் தீர்த்த யாத்திரை செய்து கிருதமாலை நதியை அடைந்து அஷ்டாங்க விமானத்தில் எழுந்தரு ளிய கூடலழகரை ஆராதித்துப் பரமபதமான வைகுந்த மாநகரைச் சென்றடைந்தான்.

## கலியுகத்தில் கூடலழகர்

கலியுகத் தொடக்கத்தில் புரூரவஸ் என்ற பேரரசன் கூடலழகருக்குத் தொண்டு செய்து வீடுபேறு அடைந்தான். அவன் மக னான இந்திரத்துய்ம்னனும் திருமால் நெறி தழுவிக் கூடலழகருக்கு அன்பனாய் நெடுங் காலம் அரசு புரிந்து வீடு பேற்றை அடைந் தான். இந்திரத்துய்ம்னனின் மைந்தனே மலயத் துவஜ பாண்டியன். இவன் வடக்கே சென்று பகையரசர்களை வென்றபோது இமயமலை குறுக்கிட அதன் கொடுமுடி மீது மீன் இலச் சினையைப் பொறித்துத் திரும்பினான். இவனையே பாண்டியர் குலபதி என்று பெரி யாழ்வார் கொண்டாடுகிறார். மேலும் இம யத்தின் மீது இலச்சினை பொறித்த வீரத்தை யும் பெரியாழ்வார் போற்றுகிறார். பெரியாழ் வாரால் போற்றப்பட வேண்டுமானால் அம் மன்னவன் பரம வைஷ்ணவனாகவே வாழ்ந்து இருக்க வேண்டும்.

'பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர்
குலபதிபோல்
திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேற்
பொறித்தாய்''

என்று எம்பெருமான் தன்னை ஆட்கொண்டு சென்னி மீது திருப்பொலிந்த சேவடியைப் பொறித்ததற்குப் பாண்டியன் பருப்பதத்தின் மீது கயல் பொறித்த செய்தியை உவமையாகக் காட்டுகிறார் பெரியாழ்வார். இப்பாசுர வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் மலயத்வஜ பாண்டியனைப் பற்றிக் கூறியவை அறியத்தக்கன.

'பாண்டிய வம்சத்துக்கு நிர்வாஹகனா யிருப்பானொரு ராஜா தானிருந்த தேசத்தில் இருந்து மகாமேரு அளவும் வழியிலுள்ள காடு அழித்து தனக்கும் தன் பரிவாரத்துக்கும்போக லாம்படி பெருவழி ஆக்கிக்கொண்டு சென்று, மகாமேருவிலே தன் வெற்றியெல்லாம் தோற்றும்படி தன்னடையாளத்தையுமிட்டுப் போந்தான்.

இம்மலயத்வஜன் திருமாலிருஞ் சோலை அழகாடத்தும் பக்தி பூண்டு கைங்கரியங்களைச் செய்தான். அதனையும் பெரியாழ்வார் தமது திருமொழியில் குறிப்பிடுகிறார்.

''மன்னர்மறுக மைத்துனன்மார்க் கொரு
தேரின் மேல்
முன்னங்குநின்றுமோழை எழுவித்தவன் மலை

கொல்நவில் கூர்வேல் கோனெடுமாறன்
தென்கூடற்கோன்
தென்னன் கொண்டாடும் தென்திருமாலிருஞ்
சோலையே''

இம்மன்னவன் குலச்செல்வியான தடாத கைப்பிராட்டியாரைச் சோமசுந்தரக் கடவுள் திருமணம் செய்து கொள்ளப் பெரிதும் உறு துணையாக இருநதவரும் கூடலழகரே.

**சங்க காலத்தில் கூடலழகர்:**

தலையானங்காலத்துச் செருவேன்ற பாண்டியன் நெடுஞ்செழியன் கூடலழகருக்குப் பல திருவிழாக்களை எடுத்து மகிழ்ந்தான். ஆவணித் திருவோணத்தில் கூடலழகருக்குச் சிறப்பான வழிபாடுகள் செய்தான். அதனை 'மாயோன் மேய ஓண நன்னாள்'' என்று பாராட்டுகிறார் மாங்குடி மருதனார் தாம் இயற்றிய மதுரைக் காஞ்சி என்ற பாடலில், கூடலழகரே துவரைக் கோமான் என்ற பெயரில் சங்கப் புலவராக வீற்றிருந்தார் எனக் கருத இடமுண்டு. கூடல் என்பது தமிழ்ச் சங்கத்தில் புலவரின் கூடலைக் குறிகும். அச் சான்றோர் கூடலில் புலமை அழகுடன் வீற்றிருந்ததால் கூடல் அழகர் என்று அழைக்கப் பட்டார். இத்தொடரையே வடமொழியில் வியூக சுந்தரராஜன் என்று மொழி பெயர்த்துக் கொண்டார்கள்.

தொல்காப்பியச் செய்யுளியலில் 'கொச்ச கம் அராகம்' என்ற சூத்திரவுரையில் பேராசிரியர் ஒரு பரிபாடல் செய்யுளை உதாரணமாகக் காட்டுகிறார். அப்பரிபாடல் கூடலழகரைப் போற்றுகிறது.

"வானார் எழிலி மழைவளம் நந்தத்
தேனார் சிமய மலையின் இழிதந்து
நான்மாடக் கூடல் எதிர்கொள்ள, ஆனா
மருந்தாகும் தீநீர் மலிதுறைமேய
இருந்தையூர் அமர்ந்த செல்வ; நின்
திருந்தடி தலையுறப் பரவுதும் தொழுதே''.

என்ற அடிகளிலே கூடலழகரை இருந்தையூர் அமர்ந்த செல்வன் என்று போற்றியிருக்கிறது. இருந்தையூர் என்பது இருந்தவூர் என்பதன் மருவிய வழக்குச் செல்லாகும். திருமாலாகிய கூடலழகர் இருந்த கோலத்துடன் எழுந்தருளி யிருப்பதால் கூடலழகர் திருக்கோயில் அமைந்த பகுதியை இருந்தையூர் என்று சங்க காலத்தவர் வழங்கினர். கூடலழகருக்கும் 'இருந்தவள முடையார்' என்ற திருநாமம் சங்க காலத்தில் மிகவும் பிரபலமாகியிருந்தது. சிலப்பதிகார அரும்பதவுரைகாரரே 'ஸ்ரீ இருந்தவளமுடையார்' என்ற திருப்பெயரைக் குறிப்பிட்டிருக் கிறார்.

சிலப்பதிகாரக் கதையில் மாதரி என்னும் இடைக்குல மடந்தை ஆய்ச்சியர் குரவை முடிந் ததும் வையைக் கரையிலுள்ள நெடுமாலைப் பூசிப்பதற்குச் சென்றார்.

'ஆயர் முதுமகள் ஆடிய சாயலாள்
பூவும் புகையும் புனைசாந்தும் கண்ணியும்
நீடுநீர் வையை நெடுமால் அடியேத்தத்
தூவித் துறைபடியப் போயினாள்''
(சிலம்பு)

இங்கு 'நீடுநீர் வையை நெடுமால்' என்பதற்கு அரும்பதவுரைகாரர் 'ஸ்ரீ இருந்த வளமுடையார்' என்று விளக்கம் எழுதுனார். மற்றொரு உரைகாரரான அடியார்க்கு நல்லார் 'அந்தர வானத்தெம்பெருமான்' என்று விளக்கினார். இன்றும் கூடலழகர் திருக்கோயில் அஷ்டாங்க வமானத்தின் அந்தரவானத்தில் சயனத் திருக் கோலத்தில் க்ஷீராப்திநாதன் (திருப்பாற் கடல் நாதன்) எழுந்தருளியிருப்பதைக் காணலாம்.

கூடலழகர் கோயில் கொண்டிருக்கும் இருந்தையூர்ப் பகுதியில் சங்கத்துச் சான் றோர் பலர் வாழ்ந்தனர். இருந்தையூர்க் கருங்கோழிமோசி என்ற தமிழ்ப் புலவர் ஒருவரை இறையனார் களவியலுரையில் நக்கீரர் குறிப்பிட்டிருக்கிறார்.

**பெரியாழ்வாரும் கூடலழகரும்:**

ஸ்ரீ வல்லப தேவன் என்ற பாண்டியன் ஒருவன் வீடுபேற்றைத் தரவல்ல பரம் பொருளை அறிய விரும்பினான். அவனுக்குப் புரோகிதராக இருந்தவர் செல்வ நம்பி என்ற பெரியார். அவருடைய கனவில் கூடலழகர் காட்சியளித்து ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து பெரியாழ்வாரை அழைத்து வித்வான்கள் கூடிய பெரிய சபையில் எழுந்தருளச் செய்தால்பரதத் துவத்தை அவர் எளிதில் அறுதியிடுவார் என்று கூறி மறைந்தார். பெரியாழ்வாரும் செல்வ நம்பியால் அழைக்கப்பட்டார். ஆழ்வார் வித்வத்ஸதஸ்ஸில் எழுந்தருளக் கூசினார். எம் பெருமான் ஆழ்வாருக்குக் கனவில் ஆணையிட ஆழ்வாரும் மதுரை மாநகர் எழுந்தருளினார்.

பாண்டியன் பேரோலக்கத்திலே பல சமயவாதியரும் கூடியிருந்தனர். ஆழ்வாரும் பெருமிடுக்குடன் சுருதி, ஸ்மிருதி, இதிகாச புராணங்களிலிருந்து பற்பல வாக்கியங்களைக் காட்டித் தம் சொல்வன்மையாலும் பிரமாண பலத்தாலும் திருமாலான நாராயணனே பரம் பொருள் என்று நிரூபித்தார். பாண்டியன் கொண்டாடினான்; புலவர்களோ சங்கநாதம் செய்து ஆழ்வாரின் வெற்றியைப் போற்றினர், அப்போது பரிசிலாகக் கட்டியிருந்த பொற்கிழி யும் பொற்கம்பத்திலிருந்து தாழ்ந்து பெரி யாழ்வாரின் திருக்கரங்களைச் சேர்ந்தது. ஸ்ரீவல்லபதேவனை ஆழ்வார் திருத்திப்பணி கொண்டு தம் சிஷ்யனாக்கிக் கொண்டார். பாண்டியனும் ஆசாரியரான பெரியாழ்வாரைக்

கொண்டாடக் கருதி ஆழ்வாரைப் பட்டத்து யானை மீது ஏற்றித் திருவீதிகளிலே நகர் வலம் வந்தான். தானே ஆழ்வாருக்குச் சாமரம் வீசினான். இதனைக் குருபரம்பராப்ரபாவம் பின்வருமாறு கூறுகிறது:

''பூதமோர் ஐந்துமேத்தப் புரையறு
மறங்களேத்த
வேதமோர் நான்குமேத்த விண்ணவர்
குழாங்களேத்த
ஓதுமூவுலகு மேத்த ஓங்கிரு சுடரு மேத்த
மூதறிவுடைய மன்னன் சேனைகள்
முழுதுமேத்த
அந்தணர் குழாங்களேத்த அருமுனிக்
கணங்களேத்தப்
பந்தணைவிரல்சேர் செங்கைப் பாவையர்
வீதிதோறுஞ்
சந்தனக் குழம்பு சுண்ணம் தாதவிழ் மலர்கள்
சிந்தி
இந்திர விழாவதென்ன இறைத்தனர் மணியும்
பொன்னும்.''

இவ்வரிய காட்சியை நேரில் கண்டுகளிக்க விரும்பிய கூடலழகர், பிராட்டிமாரான திருமகள் நிலமகளோடும் பெரிய திருவடியான கருடாழ்வான் மீது ஆரோகணித்து ஆழ்வாருக்குத் தன் சொல்லரிய திருமேனியழகினைக் காட்டினான். அவ்வடிவழகிலே துவக்குண்ட ஆழ்வார் பக்திபரவசரானார். 'இக் கலிகாலத்தில் இங்ஙனே பேரழகுடன் பலருங்காணத் தோன்றுவதே!' என்று வயிறுபிடித்து எம்பெருமானின் அழகுக்குக் கண்ணெச்சில் பட்டுவிடுமோ என்று அஞ்சி அவ்வடிவழகுக்குக் காப்பாக யானை மீது கிடந்த மணிகளையே தாளமாகக் கொண்டு திருப்பல்லாண்டு பாடினார்.

ஸ்ரீவல்லபதேவன் ஆழ்வாரிடம் திருவிலச்சினை பெற்றுக் கூடலழகருக்கும் திருமாலிருஞ்சோலையழகருக்கும் திருப்பணிகள் செய்தான்.

ஸ்ரீவல்லபதேவனின் மகனான நெடுஞ்சடையனும் தந்தையைப் போலவே வைஷ்ணவனாயிருந்தான். சீவரமங்கல சாசனத்தில்,

'பராந்தகன் பரம வைஷ்ணவன் தானாகி
நின்றிலங்கு மணி நீண்முடி நிலமன்னவன்
நெடுஞ்சடையன்'

என்ற வரிகளே இதற்கு ஆதாரம். பெரியாழவார் பரதத்வ நிர்ணயம் செய்த சபை விளங்கிய இடத்தை 'மெய் காட்டும் பொட்டல்' என்று அழைத்தனர். இன்று அது. 'மேங்காட்டுப் பொட்டலாக' வழங்குகிறது. மார்கழி மாதத்தில் பகற்பத்து முதல்நாள் கூடலழகர் கருட வாகனத்தில் மெய்காட்டும் பொட்டலுக்கு எழுந்தருள்கிறார். பெரியாழ்வார் பரத்துவம் நிர்ணயம் செய்த பிரகாரங்களை எல்லாம் அப்போது, ''வென்று கிழியறுத்த பட்டர்'' பரம்பரையினர் புராணமாகப் படிக்கிறார்கள். திருப்பல்லாண்டு தொடக்கமும் அங்கேதான் இன்றும் நிகழ்கிறது. இந்தப் பரவஸ்து நிர்ணய விழா தொன்று தொட்டு இன்றுவரை இடையறாது நடந்து வருகிறது.

## திருமங்கையாழ்வாரும் கூடலழகரும்:

திருமங்கையாழ்வார் திருநாகைப்பட்டினத்துக்கு எழுந்தருளி நாகை அழகியாரான சௌந்தரராஜனை மங்களாசாசனம் செய்தார். அவருடைய வடிவழகுக்கு ஒருவமையிட விரும்பிய ஆழ்வார். 'கோழியாகிய உறையூரிலும், கூடலாகிய தென்மதுரையிலும் எழுந்தருளியிருக்கும்கோவலனாகிய எம்பெருமானை போன்ற பேரழகு படைத்தவர் திருநாகை அழகியார்' என்று அருளிச் செய்கிறார். உயர்ந்த வஸ்துவையே உவமைகாட்டுவது இலக்கணவிதி. ஆதலால் உவமானமாகக் காட்டப்படும் கூடல் அழகர் மிகப்பேரழகியார் என்பது திருமங்கைமன்னனின் திருவுள்ளம்.

'' கோழியும் கூடலும் கோயில் கொண்ட
கோவலரே ஒப்பர் குன்றமன்ன
பாழியந் தோளும் ஓர் நான்குடையர்
பண்டு இவர் தம்மையும் கண்டறியோம்
வாழியரோ இவர் வண்ணம் எண்ணில்
மாகடல் போன்றுளர் கையில் வெய்ய
ஆழியொன் றேந்தி ஓர் சங்கு பற்றி
அச்சோ ஒருவர் அழகியவா ''.

என்பது திருமங்கை மன்னனின் பாசுரம். இப்பாசுரத்தின் சொற்களையும் தொடர்களையும் பொருளமைதியையும் ஆழ்ந்து நோக்கினால் பெரியாழ்வாரின் 'திருப்பல்லாண்டு' திருமங்கை மன்னனின் திருவுள்ளத்தில் உறைந்து கிடப்பதைக் காணலாம்.

## எம்பெருமானாரும் கூடலழகரும் :

திருமாலிருஞ்சோலையழகருக்கு நூறு தடா நிறைய அக்கார அடிசிலும் வெண்ணெயும் சமர்ப்பித்து ஆண்டாளின் விருப்பத்தை நிறைவேற்றித் திரும்பி எழுந்தருளும்போது எம்பெருமானாராகிய ஸ்வாமி ராமாநுஜர் மதுரை மாநகருக்கு எழுந்தருளிக் கூடலழகரை மங்களாசாசனம் செய்து திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீசடகோபன் முதலிய வரிசைகளைப் பெற்று 'திருப்பல்லாண்டு விளைந்த திவ்ய தேசம்' என்று மிகவும்கொண்டாடி மகிழ்ந்தார் என்று 'ஸ்ரீராமநுஜார்ய திவ்ய சூரி சரிதை' என்ற நூலில் பிள்ளைலோகாரிய சீயர் குறிப்பிடுகிறார்.

திருமந்திரமான திருவெட்டெழுத்து விளைந்தது பதரிகாச்ரமத்தில், வதரியம்பதியில் நாராயணன் நரனுக்கு உபதேசித்தது திருமந்திரம். அதே திருமந்திரத்தை வயலாலி மணவாளன் திருமங்கை மன்னனுக்கு உபதேசித்தான். திருமந்திரார்த்தம் விளைந்தது திருக்கோட்டியூரிலே. திருக்கோட்டியூர் நம்பிகள் திருமந்திரத்தின் சீரியசெம்பொருளை எம்பெருமானாருக்கு உபதேசித்தார். எம்பெருமானார் ஊரும் உலகும் வாழ ஏழ்பாரும் உய்ய திருமந்திரார்த்தத்தை ஆசையுடையோர்க்கெல்லாம் வாரி வழங்கினார். அத் திருமந்திரார்த்தத்தின் ஸாரமே ப்ரணவமாகிய

ஓங்காரம். அந்த ஓங்காரத்தின் உட்பொருளையே பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் உபதேசித்தார்; அதாவது பிரணவார்த்தத்தை உபப்ரமணம் செய்தார். பிரணவம் அகார உகாரமகாரங்களின் சேர்க்கையானஓரெழுத்து ஒருமொழி. அகாரமான பகவானுக்கே மகாரமான ஜீவாத்மா அடிமைப்பட்டது என்பது பிரணவத்தின் தேறிய பொருள். அகாரத்தில பிராட்டி சம்பந்தம் வெளிப்படையாக அறியப் படவில்லை. பிராட்டியோடு கூடியபிரானுக்கே நாம் அடிமைசெய்வது என்றுணர்த்த விரும்பிய பெரியாழ்வார் 'திருமாலே நானும் உனக்குப் பழவடியேன்' என்று அருளிச செய்தார். திருமாலே என்பது அகாரத்தின் அர்த்தம்; நானும் என்பது மகாரத்தின் அர்த்தம். உனக்கு பழவடியேன் என்பது உகாரத்தின் அர்த்தம். இவ்வாறு பிரணவத்தின் விரிபொருளாக விளங்கும் திருப்பல்லாண்டு அவதரிக்கப் பெற்ற உத்தமோத்தம திவ்யதேசமான திருக்கூடல், பதரிகாச்சரமத்தினும் பன்மடங்கு பெருமை பொருந்தியது. அதனாலேதான் ஸ்ரீராமாநுஜர் கூடலழகர் திருக்கோயிலில் மனம் பொருநதினார்.

## திருவாய்மொழிப் பிள்ளை

திருவாய்மொழிப்பிள்ளை என்ற ஆசாரியர் கி.பி.1307-ல் திருவவதரித்தார். மதுரைக்கு கிழக்கேயுள்ள குந்திநகரத்தில் (கொந்தகை) திருவவதரித்த இப்பெரியார் பாண்டிய தேசத்தின் முதலமைச்சராகப் பணியாற்றினார். இவருடைய காலத்தில் தமிழகத்தில் துருக்கர்படையெடுப்பு நடந்தது. அப்படையெடுப்புக்களில் அழியாது கூடலழகர் திருக்கோயிலைக் காத்த பெருமை இவரையே சேரும். இவர் அமைச்சர் பதவியை துறந்து பரம வைராக்ய நிதியாய்த் திகழ்ந்தார். இவருடைய சிஷ்யரே மணவாள மாமுனிகள். திருவாய்மொழிப் பிள்ளையின் சிஷ்ய பரம்பரையினரே இன்றும் இத்திருக்கோயிலில் முதல் தீர்த்த மரியாதை மற்றும் பல சிறப்புககளையும் பெற்று வருகின்றனர்.

## மணவாள மாமுனிகள் :

மணவாள மாமுனிகள் இருமுறை மதுரைக்கு எழுந்தருளி மல்லாண்ட திண் டோளனான கூடலழகரை மங்களாசாசனம் செய்திருக்கிறார். இச்செய்தி பிள்ளை லோகாரியசியர் அருளிச் செய்த 'யதீந்திர ப்ரணவ ப்ரபாவம்' என்னும் நூலிலிருந்து அறியப்படுகிறது. மணவாள மாமுனிகளுடைய திருவடிகளில் ஆசிரயித்து சிஷ்யனான மகாபலி வாணாதிராயன் என்னும் அரசன் கூடலழகர் திருமாலிருஞ்சோலையழகர் திருமோகூர்க் காளமேகப் பெருமாள் திருக்கோயில்களுக்குப் பல திருப்பணிகள் செய்தான்.

## நாயக்க மன்னர்கள்

மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்களும் அவ்வப்போது பல திருப்பணிகளைச் செய்து வந்தனர். துவஜஸ்தம்ப முன் மண்டபமும், ஹேமபுஷ்கரணீ மண்டபமும் நாயக்கர் காலத் திருப்பணிகள். அஷ்டாங்க விமானத்தையும் அமமன்னர்கள் புதுப்பித்திருக்கக்கூடும் எனத் தோன்றுகிறது. இததிருக்கோயிலிலுள்ள மூன்று கல்வெட்டுகள 1911-ல பிரதி செய்யப்பட்டுத் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் 557, 558, 559 எண்களாகப் பதிவு செய்யப் பட்டுள்ளன. அக்கல்வெட்டுக்களால், பெருமாளின் பெயர் கூடலழகிய பெருமான் என்பதும் கோயில் நித்யப்படி நைவேத்யத்துக்கும் கட்டளைக்கும் பல கிராமங்கள் விடப்பட்டன என்பதும், நித்திய பூஜைக்கு அமுது படியும் பொற்காசுகளும நாயக்க மன்னர்களால் வழங்கப்பட்டன என்பதும் வேறு பல செய்திகளும் தெரியவருகின்றன.

## அஷ்டாங்க விமானம்

கூடலழகர் திருக்கோயிலின் பெருமைக்குக் காரணமாக நிற்கிறது கம்பீரமான அஷ்டாங்க விமானம். பகவான் எழுந்தருளியிருக்கும் விமானங்கள் 96 வகைப்படும என்று ஆகம சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவற்றுள் மிகவும் அருமையானது அஷ்டாங்க விமானம். திருக்கோட்டியூரிலும் உத்தரமேரூரிலும் அஷ்டாங்க விமானங்களைக் காணலாம். எட்டு அங்கங்களையுடையதாய் மூன்று தளங்களையுடையதாய் அமைந்திருப்பது அஷ்டாங்க விமானம். இது எட்டெழுத்துக்களையுடையதாய் மூன்று பதங்களையுடையதான திருவஷ்டாட்சர மகாமந்திரத்தின் ஸ்தூல வடிவமாகும்.

அடித்தளத்தில் எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலத்தில உபயநாச்சியார்களுடன் சேவை தருகிறார். இவரையேமல்லாண்ட திண்டோளன் என்று பெரியாழ்வாரும் கூடல் கோண்ட கோவே என்று திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்தனர். இக்கருவறையில் எழுந்தருளியிருக்கும் உற்சவர் வியூக சுந்தரராஜன் என்று அழைககப்படுகிறார். மூலவராகிய அழகர் ஒரு திருக்கரத்தால் அடியார்களை அழைத்து மற்றொரு திருக்கரத்தால் அபயமளிக்கும திருக்கோலத்தில காணப்படுகிறார். ஆதலால், ஆகூய வரதன் அல்லது அழைத்து அபயம் அளிக்கும் பெருமாள் எனறும் போற்றப்படுகிறார். பஞ்ச பேரர்களும் சக்கரத்தாழ்வாரும் அங்கு எழுநதருளியிருககின்றனர்.

இரண்டாவது தளமாகிய முதல் மாடத்தில் பெருமாள் சூரிய நாராயணனாக நின்ற திருக்கோலத்தில் இரு தேவிமார்களுடன் காட்சி தருகிறார். இவர் வர்ண கலாபத் திருமேனியுடன் எழுந்தருளியிருக்கிறார். இவரைச் சுற்றிலும் கருவறையின் சுவர்களில் மிகவும் அற்புதமானவண்ண ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. அவற்றைப் பழமை கெடாமல் போற்றிக் காக்க வேண்டும். அவற்றில் அஷ்டதிக் பாலர்களான அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், இந்திரன் ஆகியோரின் வடிவங்கள் சிறப்பாகக் காணப்படுகின்றன. இவர்களுடைய வாகனங்களான ஆடு, எருமை, நரன், மகரம், மான், குதிரை, ரிஷபம். யானைகளின், ஓவியங்களும் அற்புதமாகப் படைக்கப்பட்டிருக்கின்றன.

மூன்றாவது தளமாகிய இரண்டாவது மாடத்தில் பெருமாள் பள்ளிகொண்ட திருக்கோலத்தில் காணப்படுகிறார். இவரும் வண்ணத் திருமேனி உருவத்தையுடையவர். இவரைச் சுற்றிலும் கருவறைச் சுவரில் தசாவதாரக் கோலங்கள் சுதையால் அமைக்கப்பட்டுள்ளன. பிருகு மார்க்கண்டேயர்கள் தரை மீது அமர்ந்து காணப்படுகின்றனர்.

மூன்று தளங்களிலும் இரண்டிரண்டு சுற்றுப் பிரகாரங்கள் (திருவுண்ணாழிகைகள்) அமைந்திருக்கின்றன. ஒரே ஊர்த்துவமுகமாக ஒன்றின் மீது ஒன்றாய் மூன்று சந்நிதிகள் (கர்ப்பகிருகங்கள்) அமைந்து அவற்றில் எம்பெருமானின் மூன்று நிலையான வீற்றிருத்தல், நிற்றல், கிடத்தல் ஆகிய திருக்கோலங்களைச் சேவிக்கும் அமைப்பு மிகச் சிறப்பானது.

'நின்றது எந்தை ஊரகத்து, இருந்தது எந்தை பாடகத்து
அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாத முன்னெலாம்'

என்கிறபடியே தனித்தனியே ஊரகத்திலும் பாடகத்திலும் திருவெஃகாவிலும் சென்று நின்ற கோலத்தையும், இருந்த கோலத்தையும் கிடந்த கோலத்தையும் சேவிக்காமல் பக்தர்கள் கூடலழகர் திருக்கோயிலில் அம்மூன்று திருக்கோலங்களையும் ஒரு சேரக் காணலாம்.

அஷ்டாங்க விமானத்தின் புறப்பகுதியும் மூன்று சுற்று வரிசைகளையுடையதாய் ஒவ்வொரு சுற்றிலும் அற்புதமான சுதை உருவங்கள் அமையப் பெற்றதாய் விளங்குகிறது, விமானத்தின் சிகரத்தில் மீதுள்ள ஸ்தூபி கண்ணைக் கவரும் பொன்னிறத்தில் மின்னுகிறது. அதைச் சுற்றிலும் நான்கு சிறு ஸ்தூபிகள் அழகுடன் அமைந்திருக்கின்றன. விமானத்தில் கிரீவத்தில் கொடிகளுடன் கூடிய மாலைகள் அணி செய்கின்றன. விமானத்தின் பீடத்தில் நான்கு முனிவர்களும் அதையடுத்துக் கீழ் தட்டில் பக்கத்துக்கு நால்வராக பதினாறு முனிவர்களும் அமர்ந்திருக்கின்றனர். இவர்களில் சிலர் வீராசனத்தில் அமர்ந்திருக்கின்றனர். விமானத்தின் நான்கு மூலைகளிலும் சிங்கங்களுடன் கூடிய கருடபிம்பங்கள் அற்புதமான வேலைப்பாடுகளுடன் வியக்கத்தக்க ஆக்ருதிகளுடன் கூடி விளங்குகின்றன. விமானத்தின் கீழ்த் திசையில் ஸ்ரீபூவராகவ சுவாமி எழுந்தருளியிருக்கிறார். தென் திசையில் ஸ்ரீலட்சுமி நரசிம்மன் எழுந்தருளியிருக்கிறார்; மேல்திசையில் ஸ்ரீலஷ்மி நாராயணன் எழுந்தருளியிருக்கிறார்; வடதிசையில் ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கிறார். புறப் பகுதியான சுற்றில் எட்டுச் சிறு விமானங்களும் விமான தேவதைகளும் அமைந்திருக்கின்றன,

முதல் அடுக்கில் ஸ்ரீராமாயண சரித்திரத்தைச் சித்தரிக்கும் சுதை வடிவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவது அடுக்கில் ஸ்ரீபாகவத சரித்திரத்தை சித்தரிக்கும் சுதை வடிவங்களும், மூன்றாவதான மேல் அடுக்கில் சிவனுடைய ருத்ராகாரமான வடிவங்களும் திருமாலின் தசாவதாரக் கோலங்களும் துர்க்கையின் பல்வேறு வடிவங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.



அஷ்டாங்க விமானத்தின் ஸ்தூபியின் நிழல் தரையில் வீழ்வதில்லை. விமானத்தின் கீழ்ப்பகுதியில் அடித்தளத்தின் சுற்றுச் சுவரிலுள்ள கோஷ்ட கும்ப பஞ்சரங்களில் விசித்திரமான கொடி வேலைப்பாடுகளும் அதிஷ்டானத்தின் மேலே உள்ள பாதத்தில் நுண்ணிய சிற்பங்களுடன் கூடிய பலகணிகளும் வியக்கத்தக்க வகையில் அமைந்திருக்கின்றன.

இத்தகைய சிற்ப நுட்பம் வாய்ந்த அஷ்டாங்க விமானத்தைப் பலரும் கண்டு வியந்து பாராட்டுகின்றனர். அதிஷ்டானத்திலுள்ள கண்டத்தில் அர்த்த சித்திரங்கள் அழகு செய்கின்றன.

## அஷ்டாங்க விமானத்தை வலம் வருவதால் விளையும் நன்மைகள்

அஷ்டாங்க விமானத்தின் பெருமைகளை வடமொழியிலுள்ள பிரம்மாண்ட புராணத்துள் வரும் சேத்திரமகாத்மிய காண்டம் பன்னிரண்டு அத்யாயங்களில் வருணிக்கிறது. தேவசிற்பியான விசுவகர்மாவின் சிருஷ்டியான இவ்வஷ்டாங்க விமானத்தில் எல்லா தேவர்களும் உறைகின்றனர். ஆதலால் இவ் விமானத்தைச் சுற்றி நாளும் வலம் வருவதால் எல்லா இஷ்ட சித்திகளும் ஏற்படுகின்றன.



இவ்வஷ்டாங்க விமானம் அஷ்டாட்சர மகாமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்பதன் ஸ்தூல சரீரமாகக் கருதத் தக்கது' ஆதலால் அஷ்டாட்சர மகாமந்திரத்தைச் சொல்லிய முழுப் பலனையும் இவ்விமானத்தை வலம் வருவதால் எளிதில் அடையலாம். அஷ்டாட்சர மகா மந்திரம் தன்னைச் சொல்லு வாருக்குத் தரும் பலன்கள் இன்ன இன்னவை என்பதைத் திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தில் அருளியிருக்கிறார்:

''குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள் விசும்பருளும்
அருளொடு பெரு நிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான் கண்டு
கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.''

பிள்ளை லோகாசாரியார் என்ற பெரியார் தாம் இயற்றிய முமுட்சுப்படியில் திருமந்திரப்ரகரணத்தில் அஷ்டாட்சரமகா மந்திரத்தைச் சொல்லுவதால் அது தரும் பலன்களைப் பின் வருமாறு அருளிச் செய்வதும் கருதத் தக்கது:

'இது தாம் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேட்சிதங்களையும் கொடுக்கும். ஐச்வர்ய பகவத்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும். கர்மஞான பக்திகளில் இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக் கட்டிக்கொடுக்கும். பிரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஞானத்தைப் பிறப்பித்துக் காலட்சேபத்துக்கும் போகத்துக்கும் ஏதுவாயிருக்கும்.' ஆக கர்மஞான பக்திமார்க்கங்களைப் பின்பற்றுபவர்களும் ப்ரபத்தியான சரணாகதி நிஷ்டையில் இருப்பவர்களும் அஷ்டாங்க விமானத்தை வலம் வருவதால் தம்தம் அபீஷ்டங்களை எளிதில் அடையலாம். இவ்விமானத்தை ஒரு மண்டலம் வலம் வருபவர்கள் கைமேல்பலனை அடைந்து வருகிறார்கள். இதை இன்றும் அனுபவமாகக் காணலாம்.

## திருக்கோயில் அமைப்பு :

திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்தது. ஐந்து நிலைகளைக் கொண்ட அழகிய ராஜ கோபுரம் அமைந்திருக்கிறது. அதன் முன்னே இராப்பத்து மண்டபம் உள்ளது. கோயிலினுள் தாயாருக்கும் ஆண்டாளுக்கும் தனிச்சந்நிதிகள் உள்ளன. தாயார் சந்நிதியிலுள்ள இசைத் தூண்கள் சிற்பக் கலையின் சிகரமாய் அமைந்தவை. தாயார் திருநாமம் மதுரவல்லி. ஆண்டாள் சந்நிதியில் திருப்பாவைக கல்வெட்டுக்களும் ஓவியங்களும் காணத்தக்கன. ஆழ்வார்கள் சந்நிதியில் ஆழ்வார்களுடன் நாத முனிகள், ராமாநுஜா, கூரத்தாழ்வான், வேதாந்த் தேசிகர் ஆகிய ஆசாரியர்களும் எழுந்தருளியிருக்கின்றனர். மணவாள மாமுனிகளுக்குத் தனிச் சந்நிதி அமைக்கப்பட்டிருக்கிறது. இத்திருக்கோயிலில் தென்கலை சம்பிரதாயமும, வைகானஸ ஆகம வழிபாடும் அனுஷ்டிக்கபபடுகின்றன. வேறு விஷ்ணு ஆலயங்களில் காணப்படாத நவகிரகங்களின் சந்நிதி ஒன்றும் இத்திருக்கோயிலில்அமைந்திருக்கிறது. இது எழுபது ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டதாக அறியப்படுகிறது. திருக்கோயிலினுள் ஹேம தீர்த்தம் என்ற திருக்குளம்ஒன்றும் இருக்கிறது. இத்திருக்கோயில்லுள்ள இராம, லட்சுமணர்களின் விக்ரகங்கள் மிகப் பழமையானவை. பாண்டியர் காலத்து வார்க்கப்பட்டவை. இராமர் சந்நிதிக்கு எதிரே ஆஞ்சநேயர் சந்நிதியும், அருகே கிருஷ்ணன் சந்நிதியும் மற்றொருபுறம்சேனை முதலியார் சந்நிதியும் அமைந்திருககின்றன. கூடலழகர் சந்நிதிக்கு முன் பட்சிராஜனான கருடன் சந்நிதியும் அமைந்திருக்கிறது. பெரிய திருச்சுற்றில் மேற்கு மூலைகளில் சக்கரத்தாழ்வாரும் யோக நரசிம்மரும் பிரதிஷ்டை செய்யப்பட்டு இருக்கின்றனர். அழகிய மர வேலைப்பாடுகள் நிறைந்த வைகுண்ட ஏகாதசி ஊஞ்சல் மண்டபமும் அதற்கு எதிரே வாகன மண்டமும் கருங்கல் திருப்பணியில் அமைந்து துவஜஸ்தம்ப மண்டபத்தின் அழகை மிகுவிக்கின்றன.

## முடிவுரை :

அருள்மிகு கூடலழகரின் திருக்கோயிலின் வரலாற்றையும் அமைப்பினையும் ஒருவாறு சுருக்கமாகக் கண்டோம். விரிவாக வேண்டுவோர் கூடற் புராணத்தையும் பிரம்மாண்ட புராணத்தையும் படித்து அறியலாம்.



# வேண்டுவன நல்கும் விநாயகர் அகவல்

பேராசிரியர் டாக்டர் வி. சா. பாலசுப்பிரமணியம்



**முன்னுரை**

ஔவையார் விநாயகப் பெருமானிடத்தும், முருகவேளிடத்தும் நீங்காத பக்தி மிக்கவர். தமிழ் மீதும் அவருக்குத் தணியாத பற்று உண்டு.

'பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்-
கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத்தமிழ் மூன்றும் தா.''

என்று வரும் வெண்பா, இவரது பக்திக்கும் தமிழ்ப்பற்றுக்கும் சிறந்த சான்று. எனினும், ஔவையார் மூவர் என்பர் ஆய்வாளர்.

குழந்தைகளுக்கென்று நீதிச் செய்யுட்களும், சாதாரண மக்கள் அரிய நீதிகளை உணரும் வகையிலான பழமொழிகள் ஆகிய வற்றையும்ஆக்கித் தந்த ஔவையாரின்தமிழ்க் கொடை தனிப்பெருமை வாய்ந்தது. விநாயகப் பெருமானின் பேரருளுக்குப் பாத்திரமான இவர், அவரையே குருவாகப் பெற்று, யோக நெறிகளையும், சைவ சித்தாந்தத் தத்துவங்களையும் அறிந்து கொண்ட அனுபவப்பாட்டே விநாயகர் அகவல். அதுபற்றிச் சுருக்கமாக ஆராய முற்படுகிறது இக்கட்டுரை.

**ஔவையார் குறிப்பிடும் விநாயகரின் திருவுருவம்**

இறைவன் ஆன்மாக்களுக்கு அருளும் தண்ணாளி கொண்டவன். அந்த வகையில் ஔவைப்பிராட்டியின் சகஸ்ரார கமலத்தில் எழுந்தருளுகின்றார் விநாயகப் பெருமான். இவர் கண்ட விநாயகரின் திருவுருவம் பற்றி முதற்கண் குறிப்பிடுகின்றது விநாயகர் அகவல். பாதாதிகேச வருணனையாக அது அமைகின்றது.

விநாயகப் பெருமானின் திருவடிகள் இரண்டும் குளிர்ச்சி மிக்கவை. அன்றலர்ந்த தாமரை போன்றவை. அப்பாதங்களுக்கு மேலுள்ள கணுக்காலில் சிலம்புகள் கீதம் இசைக்கின்றன. அவரது இடுப்பிலே பொன்னாலான அரை ஞாண்கயிறு சுடர் விடுகின்றது. பட்டாடை அவரது அரையில் விளங்குகின்றது. பெரிய வயிறும், நீண்ட கொம்பொன்றும் அவருக்கே உரியன. அவரது அழகிய நெற்றியில் விளங்குவது செந்தூரப்பொட்டு. விநாயகரது நீலக் கழுத்து நெஞ்சில் நிற்கும் தகைமையது. சிவனின் திருவுருவே விநாயகர் திருவுரு என்பதால் முக்கண்கள் திருவருள் பொழிகின்றன. யானை முகத்தோன் என்பதால் மும்மதங்களும் அவருக்குண்டு. விநாயகப் பெருமானுக்கு பெரிய செவிகள் உண்டு. அவரது அழகிய மார்பகத்திலே பூணூலும் விளங்குகின்றது. தலையில் பொன்முடி சுடர் விடுகின்றது. இப்படித்தான் ஔவைக்குக் காட்சி தருகின்றார் வேழ முகத்து விநாயகப் பெருமான்; எனினும், அவரது பேரொளி மிக்க திருவுருவம் வருணனைகளுக்கு அப்பாற்பட்டது.

''மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்கு பொன்முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே''

என வரும் அடிகள் காண்க.

**திருவடிகளைச் சூட்டிய விநாயகர்**

அப்பர் சுவாமிகளுக்குச் சிவபெருமான் திருநல்லூரில் திருவடிகள் சூட்டினான் என்று பெரிய புராணம் பாடி மகிழும். அபிராமி பட்டரின் தலை மீது அம்பிகை தன் பாதமலர் சூட்டியருளினாள் என்கிறது அபிராமி அந்தாதி.

''.....வேதங்கள் பாடு மெய்ப்பீடமொரு
நாலினும் சாலதன்றோ அடியேன் முடை
நாய்த்தலையே''
(அபி.60)

''சென்னியது உன் பொன் திருவடித்தாமரை''
(அபி.6)

என்றும்,

''.....நின்பாத மென்னும் வாசமலர்
தலைமேல்
வலிய வைத்து ஆண்டுகொண்ட நேசத்தை..''
(அபி.20)



என்றும், அபிராமி பட்டர் பாடி மகிழ்தல் காண்க. அதுபோல ஔவையாரின் தலையில் திருவடி சூட்டுகின்றார் விநாயகப் பெருமான்.

''குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்து........,''
(விநாயகர் அகவல் 21-22)

என்று வரும் அடிகள் இவ்வரிய செய்தியை நமக்கு உணர்த்துகின்றன.

**குருவாக நின்று உபதேசம் செய்தல்**

மாணிக்க வாசகர், சிவபெருமானிடமே உபதேசம் பெறும் பெரும்பேறு பெற்றவர். சிவபெருமானின் அம்சமாக விளங்கும் வேழ முகத்தோனிடம் உபதேசம் பெற்ற பாக்கிய சாலி ஔவையார். ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் ஆகியவற்றை எனக்கு உபதேசித்த 'மூசிக வாகன' என்றும், பிறவியை அறுத்த பெருமான் என்றும் கூறு வார் ஔவையார்.

சீகண்டருத்திரனார், சகல வர்க்கத்தின ராகிய ஆன்மாக்களுக்குத் தலைவர். அவரால் தோற்றி ஒடுக்கப்படும் தத்துவங்கள் 'ஆன்ம தத்துவம்' எனப் பெயர் பெறும். அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் ஏழு. அவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. அசுத்த மாயையை இறைவன் நேரே தொழிற்படுத் தாது 'அனந்தர்' என்னும் வித்தியேசுவரர் வாயிலாகக் காரியப்படுத்துவான். அதனால் மேற்குறித்த ஏழும், 'வித்தியா தத்துவம்' எனப் பெயர் பெறும் என்பர். சிவம், சக்தி, சாதாக்கி யம், ஈசுரம், சுத்தவித்தை எனச் சுத்தமாயை யில் தோன்றும் தத்துவங்கள் ஐந்து. இவை ஐந்தும் ஐந்தொழில் செய்தற்கண் இறைவ னுக்கு இடமாதல் பற்றி, 'சிவதத்துவம்' என்று கூறப்படுகின்றன என்பர். (சித்தாந்தத் தெளி வியல், சி. அருணவடிவேலு முதலியார், தரும புரம் பதிப்பு, பக்கம் 166).

இந்த மூன்று தத்துவங்களையும் ஔவை யாருககு விநாயகர் முதலில் உபதேசிக்கிறார்.

இனி ஆன்ம தத்துவங்கள் 24, வித்தியா தத்துவங்கள் 7, சிவ தத்துவங்கள் 5 ஆக 36 தத்துவங்கள் என்பர். இவை ஒடுங்கின் ஞானம் பிறககும். தவிர நலவினை, தீவினைகளின் பயனை நுகரும்படி செய்யும் பிறவியை அறுத்த பெம்மான் என்றும் ஔவை கூறுதல் காண்க.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம்,-4; மெய், வாய், கண், மூக்கு, செவி என்று வரும் அறி கருவிகள் 5; வாக்கு, கை, கால், எருவாய், கருவாய் என்னும் தொழில் கருவிகள் 5; ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் என்னும் தன் மாத்திரைகள் 5; விண், காற்று தீ, நீர், மண் என்னும் பூதங்கள் 5, ஆக ஆன்ம தத்துவங்கள் 24.

மாயை, காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருடன் என்று வரும் வித்தியாதத்துவம் 7. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் எனும் தத்துவங்கள் இல்லாமல் ஆன்மா எவ் வகையிலும் செயல்படுதல் இயலாது. இவை ஐந்தும் ஆன்மாவிற்கு ஐந்து சட்டைகளாய் எப்பொழுதும் ஒட்டி நிற்கும் என்றும் கூறுவர்.

சிவம், சக்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என சுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் ஐந்து. இது முன்னரும் சுட்டப் பட்டது. இவை ஐந்தும் இறைவனுக்கு ஐந் தொழில் செய்தற்கண் இடமாகும். இக்கார ணத்தால் இவை சிவதத்துவம் எனப்படும்.

''கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து''
(29—30)

என்று வரும் விநாயகர் அகவல் அடிகள் மேற் கண்ட செய்திகளை உணர்த்தும் என்பர்.

**நெறிகள் நான்கு:**

சைவ சமயத்தில் சொல்லப்படுவன சரியை கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகள். இவற்றுள் முதல் மூன்றும் ஞானத் திற்கு வழி. ஞானம் ஒன்றே முக்தி அல்லது வீடு பேற்றிற்கு அடிப்படை. இவற்றை உப தேசித்த விநாயகர், ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்களையும், அவை செய் யும் மயக்கத்தையும் ஒழித்தார் என்பார் ஔவை. இவற்றுள் ஆணவமலம் உயிருடன் கலந்து நின்று, அறிவு, இச்சை செயல்களைத் தடுப்பது, அநாதியாய் இருப்பது. கன்மமலம் உயிர்செல்லும் இடமெல்லாம் தொடர்ந்து சென்று கருத்துக்களைக் கட்டுவது; அதாவது உயிரைப்பற்றி இருப்பது. மாயை உயிருடன் கூடி தநுகரணபுவன போகங்களாய் நிற்பது.

சரியை, அதாவது தொண்டு நெறியில் நின்றவர் திருநாவுக்கரசர். கிரியை அல்லது சிவ பூசை நெறியில் நின்றவர் திருஞான சம்பந்தர், யோகம் அதாவது யோக நிலையில் நின்றவர் சுந்தரர், ஞானம் அல்லது ஞான நிலையில் நின்றவர் மாணிக்கவாசகர் என்றும் சைவ சித்தாந்தம் கருதும்.

**'ஓம்' என்னும் மந்திரத்தால் ஒன்பது வாயில்களை அடைத்தல்**

நம் உடம்பில் கண்ணுக்குப் புலனாகாது இருப்பன எண்ணற்ற வியர்வைத் துளைகள். கண்ணுக்குத் தெரிவன ஒன்பது வாயில்கள். காற்றை 'ஓம்' என்னும் மந்திரத்தால் அடைக்க ஔவையாருக்கு அருளிச் செய்தவரும் விநாயக பெருமானே! பின்னர் அக்காற்றை மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்கள் வழியே செலுத்துவதற்கும், புருவ நடுவில் உள்ள சகஸ்ராரம் என்னும் இடத்தில் நிறுத்தி அங்கு ஒளிமயமான வடிவில் விநாயகரைத் தரி சிக்கும் பேற்றையும் ஔவையாருக்கு அருளிய வரும் விநாயகரே: இச்செய்தியை அடிப்படை உண்மையாகக் கொண்டது தான் விநாயகர் ஆகவல்.

''மூலா தாரத்தில் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறிவித்து,..''

(44—43)

என்றுவரும் அடிகள் மேற்கண்டவற்றை உணர்த்தும். விநாயகர் சிவபெருமான் ஆகிய இரு தெய்வங்களும் ஒன்றே என்பதும் இங்கு எண்ணத்தக்கது.

**தூல சூக்கும சரீரங்கள் :**

சந்திர அமிர்தம், சூரியன் இயக்கம், மற்றும் சந்திரனின் தன்மையுடன், சந்திர கலை பதினாறுடன், சூரிய கலைகள் பன்னி ரண்டும் காட்டி அருளினார் விநாயகர்.

உடம்பினைத் தூல சரீரம், சூக்கும சரீரம் பரம சரீரம் எனப்பிரிப்பர். தூல சரீரம் அல்லது உடம்பில், முப்பத்தாறு தத்துவங் களும், கீழே உள்ள பிருதிவி முதலிய பூதங்கள் ஐந்தும், செவி முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு முதலிய கன்மேந்திரியங்கள் ஐந்தும் அமையும்.

தன்மாத்திரைகள் ஐந்தும், மனம், அகங் காரம், புத்தி என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும் ஆகிய எட்டும் சேர்ந்தது சூக்கும சரீரம் ஆகும். இதற்குப் புரியட்ட சரீரம் என்ற பெயரும் உண்டு. மூலப் பிரகிருதியும், வித்தியா தத்துவங்கள்ஏழும் பரமசரீரமாகும். இதில் மூலப் பிரகிருதி குணசரீரம், காலம் நியதி முதலிய ஐந்தும் கஞ்சுக சரீரம்; மாயை காரண சரீரம் என்றெல்லாம் பிரிக்கப்படும். இச்சரீரங்களின் வேறுபாடுகளையும், விநாயகப் பெருமான் ஔவை பிராட்டிக்கு உபதேசித் தருளினார்.

**சிவ வேடமும், திருநீறும்:**

அணுவுக்கு அணுவாய் இருப்பவன் இறை வன்; அண்டங்களுக்கு அப்பாற்பட்டவனும் அவனே! கரும்பினுள் கட்டியாய் இனிப்பவ னும் அக்கடவுள் தான். இதனை உணர்த்திய விநாயகர், ஔவையாருக்கு சிவவேடம், திருநீறு ஆகியனவும் விளங்குமாறுதிருவருள் செய்வதுடன், உண்மையான பக்தர்களின் கூட்டத்திலும் சேர்ப்பித்தார். 'சிவாய நம' என்னும் ஐந்து எழுத்து மந்திரத்தையும், அதன் தத்துவப் பொருளையும் ஔவைக்குச்சொல்லி அருளினார், ஔவையை ஆட்கொண்ட அப் பெருமான். அவரது திருவடிகளில் வீரகண்டை விளங்குவதோடு, தெய்வ மணமும் கமழ்கின் றது என்கிறது விநாயகர் அகவல்'

**முடிவுரை:**

'யான்பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்பது ஆன்றோர் மொழி. ஔவையாரும் இக்கருத்தினரே. யோகம் மற்றும் சைவ சித்தாந்தக்கருத் துக்கள் பலவற்றையும்அறியத் தக்க ஆசிரியர் வேண்டும். ஔவையாரின் பக்தியால், அவருக்கு விநாயகப் பெருமானே ஆசிரியராக வந்து அமர்ந்து உபதேசம் செய் தருளினார். எல்லா மக்களும் மெய்யன்பர் களாக விளங்கி முக்தி பெற விநாயகர் அருள் வார் என்று குறிப்பாகவும், சிறப்பாகவும்' உணர்த்த எழுந்த பாடலே 'விநாயகர் அகவல்' என்று கூறலாம்.

'அஞ்சக்கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலை அறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே''

(69—72)

டும் அழகர் மலையையடைவது வழக்கம். திருமலை நாயக்கர், இந்த இரண்டு விழாக்களையும் ஒன்றாகச் சேர்த்தால், அது மிகவும் சிறப்பாக இருக்கும் என்று கருதி அப்படியே செய்தார். அவருடைய ஏற்பாட்டின்படியே இப்பொழுது நடந்து வருகிறது.

இப்பொழுது ஸ்ரீ கள்ளழகர் வைகையாற்றில் இறங்கி, வண்டியூர் சென்று, தன் மலைக்குத் திரும்பி விடுவதைப்பற்றி ஒரு கதை வழங்குகிறது. இக்கதைக்கு சாஸ்திர, புராண ஆதாரம் ஒன்றும் இல்லை. ஆகையால் பொதுவாக சைவ, வைஷ்ணவ மதங்களை ஐக்கியப்படுத்தும் ஒரு முயற்சியாகவே இதைக் கொள்ள வேண்டும். தன் தங்கை ஸ்ரீமீனாட்சிக்கும், ஸ்ரீ சுந்தரேஸ்வரருக்கும் கல்யாணம் நடக்கப்போகும் செய்தியைக் கேள்விப்பட்டு ஸ்ரீ அழகர் கள்ளழகர் திருக்கோலத்துடன் அந்த வைபவத்தைப் பார்க்க 12 மைல் தூரத்திலுள்ள தன் இருப்பிடத்தை விட்டுச் சகல கோலங்களுடன் மதுரையை நோக்கி வருகிறார் என்பது இக்கதை. பல்லக்கில் கள்ளர் திருக்கோலத்துடன் வழியில் பல மண்டபங்களில் தங்கி, அவர் தல்லாகுளத்தில் உள்ள பெருமாள் கோயிலை அடைகிறார். இந்த சேவையைப் பார்ப்பதற்கும் அழகரை எதிர்கொள்வதற்கும் மதுரை மக்கள் திரண்டுவரும் காட்சிதான் ஸ்ரீ ஸ்ரீகள்ளழகர் எதிர் சேவை என்று சொல்லப்படும். இரவில் அம்பலக்காரர் மண்டபத்தில் பிரம்மாண்டமான வாணவேடிக்கைகள் கூத்துக்கள் கொட்டு மேளங்கள் முதலியவை நடக்கும். மறுநாள் விடியற்காலை தல்லாகுளம் பெருமாள் கோவிலிலிருந்து (சித்ரா பௌர்ணமியன்று) அழகர் குதிரை வாகனத்தில் புறப்பட்டு, வைகையை நோக்கிச் செல்லுவார். புறப்படும் முன்பு ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்துசூடிக்கொடுத்த நாச்சியாராகியஸ்ரீஆண்டாளின் மாலையைச் சாற்றிக் கொள்கிறார். இது தவறாமல்வருடந்தோறும் நடந்துவருவது விசேஷம். ஸ்ரீஅழகர் ஆற்றுக்குச் செல்லும் பொழுது முதலில் வெட்டிவேர் சப்பரத்திலும் பிறகு மைசூர் மண்டபத்திலிருந்து ஆயிரம் பொன் சப்பரத்திலும் எழுந்து அருளும் காட்சியே கண்கொள்ளாக் காட்சியாகும். ஆற்றில் எழுந்தருளியதும் மதுரை ஸ்ரீவீரராகவ பெருமாள் அவரை எதிர் கொண்டு அழைக்கிறார். இந்த வைபவம் அழகர் ஆற்றில் இறங்குதல் என்று சொல்லப்படும். இதைக் காண லட்சக்கணக்கான மக்கள் திரண்டு வருவதும் கண்கொள்ளாக்காட்சியாகும். மதுரையில் மழை என்று பாராமல் ஜனங்கள் பகலும் இரவும் ஒரு சிறிய இடத்தையும் விடாமல் நிறைத்துக் கொண்டு ஆற்றிலும் அதன் கரைகளிலும் மண்டபங்களிலும் கூடியிருப்பார்கள். பின்பு வைகையாற்றின் வழியாகவே நேராக வண்டியூருக்குப் போகிறார். அங்கு அன்றிரவு தங்கி இளைப்பாறிச் சைத்யோபசாரம் செய்து கொண்டு மறுநாள் காலை சேஷவாகனத்தில் எழுந்தருளி தேனூர்மண்டபத்தையடைகிறார். அங்கு தங்கக் கருட வாகனத்தில் மண்டூக மகரிசிக்கு மோட்சமளிக்கிறார்; பிறகு அன்றிரவு ராமராயர் மண்டபத்திற்கு எழுந்தருளித் தசாவதார சேவை சாதிக்கிறார். மறுநாள் காலை அழகர் மோகனாவதார சேவையருளி ஆனந்தராயர் பல்லக்கில் ராஜாங்க சேவையுடன் புறப்பட்டு மைசூர் மண்டபத்தில் ஸ்ரீ கள்ளழகர் திருக்கோலத்துடன் புஷ்பப் பல்லக்கு சேவை நடக்கும். மறுநாள் காலையில் ஸ்ரீ அழகர் அப்பன் திருப்பதிக்குச் சென்று திருமலையை அடைவார். மறுநாள் அவருக்கு அங்கு சாத்துமுறை நடக்கும்.

இந்த அழகர் திருவிழா மொத்தம் ஒன்பது நாள் நடக்கும். அழகர் மதுரைக்குப் புறப்படும் முன்பே, திருமலையில் அவருக்குத் திருவிழாக்கள் தொடங்கிவிடும். அந்தத் திருவிழாவின் 4-ம் நாள் மதுரைக்குப் புறப்பட்டு ஒன்பதாம் நாள் மீண்டும் தம்மலைக்குத் திரும்பிவிடுவார். அழகர் வைகையாற்றில்தங்கியிருக்கும்படியான மூன்று நாட்களிலும் இரவும் பகலும் அங்கு சேரும் ஜனக்கூட்டம் கணக்கிட முடியாது. அங்கே அழகர் அருளுகின்ற பலவிதமான சேவைகளைக் கண்டுகளிக்கவே மக்கள் கூட்டம் திரண்டிருக்கும். அப்போது இரவில் வாண வேடிக்கைகளும் விளையாட்டுக்களும் ஆரவாரங்களும் அளவற்று நடக்கும். இவற்றையெல்லாம் காண, பல மைல் தூரத்திலுள்ள கிராமங்களிலிருந்து மக்கள் மாட்டு வண்டிகளில் வந்து, மூன்று நான்கு நாட்கள் குடும்பத்துடன் தங்கியிருந்து போவார்கள்.

ஸ்ரீ அழகருக்கு நடக்கும் மற்ற திருவிழாக்களில் முக்கியமானவை வைகாசி வசந்த உத்சவத்திருநாள், (இது வசந்த மண்டபத்தில் 10 நாள் நடக்கும்), ஆடி பிரம்மோத்சவம் (10 நாள்), ஐப்பசி தலையருவி உத்சவம் அல்லது தொட்டி உத்ஸவம் (3 நாள்), கார்த்திகை உற்சவம், மார்கழித் திருநாள், திரு அத்தியயன உத்சவம், மாசி தெப்பம் பங்குனி திருக்கல்யாணம் முதலியன. சித்திரைத் திருவிழாவிற்கு அடுத்தபடி பெரிய திருவிழா ஆடிப் பிரம்மோத்சவமே. இந்தப் பிரமோத்சவம் பத்து நாள் நடக்கும். அதில் ஒன்பதாம் நாள் பௌர்ணமியன்று திருத்தேர் நடக்கும். இந்தப் பிரமோத்சவத்திற்குக் கிருஷ்ணதேவராயர் இரண்டு கிராமங்களை மானியமாகக் கொடுத்தார். அடுத்த பெரிய உத்சவம் மார்கழித் திருநாள் என்பது. அப்போது இராப்பத்து, பகல் பத்து உற்சவங்கள் முறைப்படி நடக்கும். இதில் 8-ம் நாள் தங்கக்குதிரை வாகன சேவை நடைபெறும். ஸ்ரீஆண்டாள்இங்குகள்ளழகரை கலியாணம் செய்து கொண்டதாக ஐதிகம் உண்டு. ஆகையால் இந்த விழா இங்கு மிகச் சிறப்பாக நடைபெறும். இத் திருக்கல்யாணம் பங்குனி உத்திரத்தில் நடைபெறும்.

பஞ்ச பூதங்களுக்குரிய விசேஷ நாட்களில் நடைபெறும் திருவிழாக்களும் இக்கோயிலில் தனிச்சிறப்புடையவை. அவை பிருதிவி (மண்) நாளாகிய விநாயக சதுர்த்தியும் அப்பு (தண்ணீர்) நாளாகிய ஆடிப் பதினெட்டாம் பெருக்கும், தேஜஸ் (அக்னி) நாளாகிய கார்த்திகைத்தீபமும், வாயு (காற்று) நாளாகிய சரஸ்வதி பூஜையும், ஆகாச நாளாகிய மகர சங்கராந்தியும் ஆகும்,

# பண்ணாரி மாரியம்மன்

## டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்

பண்ணாரி என்ற சிற்றூர், பெரியார் மாவட்டத்தில் உள்ளது; அவ்வூர் மாரியம்மனுக்குப் பண்ணாரி மாரியம்மன் என்று பெயர்.

பெரியார் மாவட்டத்தில் பவானிசாகர் பார்க்க வருவோர் பண்ணாரியும் சென்று மாரியம்மனை வழிபடுகிறார்கள்.

பெரியார் மாவட்டம், கோவை மாவட்டம் ஆகிய இரு மாவட்டத்து மக்களுக்கும் பண்ணாரி மாரியம்மன் ஒரு இன்றியமையாத கடவுளாக இருக்கிறது.

அப்பகுதி மக்கள் 'சக்தி உள்ள தெய்வம்', 'நினைத்தது நடக்கும்' என்றெல்லாம் பண்ணாரி மாரியம்மனைப் பற்றி, இறையுணர்வு ததும்ப, கண்ணில் நீர்மல்க, இன்றும் கூறுகிறார்கள்.

கார்த்திகை போன்ற சிறு சிறு சிறப்பு நாட்களில்கூட, பண்ணாரியில் பொது மக்கள் கூடிவிடுகிறார்கள். பேருந்துகளில் பார்த்தால், 'பண்ணாரி போறோம்' 'பண்ணாரி போறோம்' என்ற பேச்சுத்தான் இருக்கும்; அந்த அளவுக்கு பண்ணாரி மாரியம்மன் மகிமையுடன் விளங்குகிறாள்;

பண்ணாரி என்ற அச்சிற்றூரில் இக்கோயில் ஒன்றே சிறப்பு; வேறு ஒரு சிறப்பும் இல்லை; அவ்வூரின் சுற்றுப்புறமெல்லாம் ஒரே காடுதான்; இரவில் அக்காட்டுப்பகுதியில் யானைகள்கூட நடமாடும் என்று தெரிவித்தார்கள். அங்கிருந்து ஏறத்தாழ இருபது கல் தொலைவில், திம்பம் மலை உள்ளது. அதுவும் காடுதான்,

பண்ணாரி மாரியம்மன் கோயில் தற்போது நிர்வாகத்தாரால் நன்கு எடுத்துக்கட்டப்பட்டு, பக்தர்கள் கூடுவதற்கு ஏற்ப ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

ஆனால், பழங்காலத்தில் மிகச்சிறிய அளவில்தான் அம்மாரியம்மன் கோயில் இருந்துள்ளது.

எப்போது அம்மாரியம்மன் உருவானது?

இதைக்கூறச் சரியான சான்றுகள் அங்கு இல்லை; எந்தக் கல்வெட்டும் இல்லை.

அவ்வூர்ப் பெரியவர்களைக் கேட்டால், 'பக்கத்து மலைகளில் இருந்த அம்மா, முன்னொரு நாளையிலே, இந்த ஊருக்கு இறங்கி, ஒரு மரத்தடியிலே உட்கார்ந்திட்டா' என்கிறார்கள்.

அவர்கள் கூறுவதற்கு ஏற்பவே, பண்ணாரி மாரியம்மன் கற்சிலை முன்பாக ஒரு மரம் வெட்டப்பட்டு, அதன் அடி மட்டும் அன்றும், இன்றும், கரையான் அரிக்காமல் உள்ளது; அதற்கும் இப்போது அருச்சனை செய்கிறார்கள். இது தவிர, பண்ணாரி மாரியம்மன் முன்பு ஒரு கல்லால் ஆன இலிங்கமும் உள்ளது.

பண்ணாரி மாரியம்மன் அமர்ந்த கோலத்தில் உள்ளாள். வலப்புறம் இரண்டும் இடப்புறம் இரண்டுமாக மொத்தம் நான்கு கைகள் இருக்கின்றன. இடப்புறக் கீழ்க்கையில், குங்கும கிண்ணம் உள்ளது. இடப்புற மேற்கையில் சங்கு உள்ளது. வலப்புறக்கீழ்க்கையில் உடைவாள் உள்ளது; வலப்புற மேற்கையில் உடுக்கை உள்ளது.

பண்ணாரி மாரியம்மனுக்கு அப்பகுதி மக்கள் வேண்டிக் கொண்டு, வேண்டுதல் நிறைவேறியதும், காணிக்கைகளைச் செலுத்துகிறார்கள். சிலர் மொட்டை போடுகிறார்கள், சிலர் குழந்தைகளுக்கு உடல் நலமில்லாது வேண்டியிருந்தால, உடல் குணமாவதும் குழந்தை தவழ்வது போல் மண்ணால் செய்து, அப்பொம்மையைப் பண்ணாரி மாரியம்மன் கோவில் முன்பாகச் சமர்ப்பித்துச் செல்கிறார்கள். சிலர் நீண்ட சூலத்தை வைத்துச் செல்கிறார்கள். சிலர் கால், கை உருவங்களை மண்ணாற் செய்து வைத்துவிட்டுச் செல்கிறார்கள்.

ஆனால், பண்ணாரி மாரியம்மனுக்கு கடா வெட்டுவதில்லை. 'கடா வெட்டுவதானால், சிறிது தொலைவு தள்ளி உள்ள இவள் தங்கச்சுக்கு, ஒரு ஊருணிக் கரையோரம் வெட்டுவோம்' என்கிறார்கள் அவ்வூர்ப் பெரியவர்கள்.

பூகோள, சமுதாய நோக்கில் ஆய்ந்தால், பண்ணாரி மாரியம்மன் அவ்வட்டார மக்களுக்கு ஒரு காவல் தெய்வமாக, ஒரு நம்பிக்கைத் தெய்வமாகப் பழங்காலத்தில் திகழ்ந்திருக்க வேண்டும் என்ற முடிவு ஏற்படுகிறது. ஏனென்றால், அவ்வட்டாரம் முழுதும் சுற்றிலும் காடுகள். பாம்பு, யானை முதலியவற்றால் ஏதும் தீங்கு விளையுமோ என்று அந்தக் காலத்தில் அப்பகுதி மக்கள் மிகவும் அஞ்சியிருக்க வேண்டும். அவர்களுக்கெல்லாம் அடைக்கலம் கொடுக்கும் வகையில் பண்ணாரி மாரியம்மன் வழிபாடு ஏற்பட்டிருக்க வேண்டும்.

பண்ணாரி மாரியம்மன் கை வாள், அப்பகுதி ஆண்களைக் காப்பதையும் கைக் குங்குமம், அப்பகுதிப் பெண்டிரின் நெற்றிக் குங்குமத்தைக் காப்பதையும் குறிக்கும்.

# நந்தி அருள் பெற்ற நன்னகர்

முருகனடிமை சிவத்திரு வடிவேல் பிள்ளை
திருவையாறு.

ஐயாறப்பர் துணை

'வான் பொய்ப்பினும் தான்பொய்யா மலைத்தலைய
கடற்காவிரி புனல்பாய்ந்து பரந்து பொன் கொழிக்கும்'

என்று புகழப் பெற்ற காவிரியின் வடகரைத் தலமாக விளங்குவது திருவையாறு.

சுற்றிலும் வயல்கள் சூழ்ந்து, விண்ணைத் தொடும் தென்னை மரங்கள் காட்சித்தர ஐயாற்றின் நடுநாயகமாக விளங்குவது அறம் வளர்த்த நாயகியுடன் ஐயாற்றெம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாகும்.

இத்தலம் பற்றி, ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், பட்டினத்தார், ஐயடிகள் காடவர்கோன், அருணகிரிநாதர் போன்ற அருளாளர்கள் பலர் சிறப்புறப் பாடிப் பரவியுள்ளனர்.

அவற்றுள், 'புலனைந்தும் பொறி கலங்கி' என்று தொடங்கும் தேவாரம் ஞானசம்பந்தர் பெருமானால் அருளப் பெற்றதாகும். 'மாதர் பிறைக் கண்ணியானை' என்னும் பாட்டு அப்பர் பெருமானால் பாடப்பெற்றது. இவை இரண்டும் இரண்டு கண்களைப் போல் சிறப்புற அமைந்திருப்பினும், மணிவாசகப் பெருமானின் போற்றித் திருவகவலும் எண்ணி மகிழத்தக்கது.

'ஆரூர் அமர்ந்த அரசே போற்றி' என்ற அடிக்கு அடுத்தபடியாக, 'சீரார் திருவையாறா போற்றி' என்று மணிவாசகப் பெருமான், திருவாரூர்க்கும், திருவையாற்றுக்கும் தொடர்பு படுத்திக் கூறுவது, இரண்டும் பஞ்சநதித் தலங்கள் என்ற ஒற்றுமை கருதியேயாம்.

திருவையாறு பல்வேறு சிறப்புக்களைப் பெற்றுள்ள தலம் என்றும், சிறப்பாக திருநாவுக்கரசர் கயிலை செல்ல நினைத்த தம் பயணத்தைத் தொடங்கும்போது, 'இறைவரையாம் கயிலைமால்வரையாவது, மானுடரால் காண இயலாது' என்று தடுக்கப்பட்ட போது, 'ஆளுநாயகன் கயிலையின் இருக்கை கண்டல்லால்-மாளும் உடல்கொண்டு மீளேன்' என்று உறுதியுடன் கூற, 'பழுதில் சீர் திருவையாற்றில் காண்' என்று இறைவனால் அருளிச் செய்யப் பட்ட திருத்தலமாகும். அதனையொட்டி, இன்றும் 'தென்கயிலாயம்' என்று சிறப்பிக்கப்பெற்று அப்பர் திருக்கயிலாயக் காட்சி காணும் ஐதிகம், சிறப்பாக நடைபெற்று வருதனைக் கண் பெற்ற பய.., கண்டுகளிக்கலாம். அன்று அப்பர் பெ.. மானுக்கு அபிசேகமும் 10.30 மணி (காலை) தீபாராதனையும் நடைதீபாபெறுகிறது,

திருத்தொண்டர் புராணம் அருளிச் செய்த தெய்வச் சேக்கிழார் பெருமான்,

'நங்கள் நாதனாம் நந்தி தவம் செய்து
பொங்கும் நீடருள் எய்திய பொற்பது
கங்கைவேணி மலரக் கனல் மலர்
செங்கையாளர் ஐயாறும் திகழ்வது'

என்னும் திருப்பாடலின் வழி, தென்திசையின் ஏற்றத்தை மொழி தருமிடத்து, இவ்வூரில் அவதாரம் செய்த நந்தியம் பெருமானைப் பற்றிக் கூறியருளினார். இந்த நந்தியெம் பெருமான் துருவாச முனிவருடைய மாணாக்கரான சிலாத முனிவருக்கும், ஊர்மிளா தேவிக்கும் திருக்குமாரராக அவதாரம் செய்து சிவனை வழிபட்டு பிரம்பும், சுரிகையும் மான் மழுவுடன் கூடிய சிவனைத் தொழும் தலைமையும் பெற்று, அதிகார நந்தி என்ற திருநாமமும் பெற்றார்.

'நந்தி அருள்பெற்ற நாதரை நாடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண் மருமாமே'

என்று திருமூலரால் குறிப்பிடப்படும் நந்தியும் இவரேயாவர். அகச்சந்நிதானத்தில் முதலாவதாகக் குறிக்கப் பெறுவர். எம்பெருமான் ஏறிச் செல்லும் இடபம் வேறு. திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாகிய சிவனுக்குத் திருமால் இடபமாக அமர்ந்ததனை,

'தடமதில்கள் அவை மூன்றும் தழலெரித்த
அந்நாளில் இடபமாய் தாங்கினார்
திருமால்காண் சாழலோ'

என்ற திருவாசகத்தில் வரும் இடபமோவேறு.

எனவே, கயிலாயத்தில் சீகண்ட பரமசிவமாக எழுந்தருளி உபதேசம் செய்த சிவபெருமானிடம் முதலில் உபதேசம் பெற்றவரும் சிவசாரூபமும் அடையப் பெற்றவருமான நந்தியெம்பெருமான் அவதாரம் செய்த தலம் திருவையாறே ஆகும். திருஞானசம்பந்தர் ஐயாற்றுக்குவருகை தந்ததனைச் சொல்லவந்த சேக்கிழார் 'நந்தியருள் பெற்ற நன்னகர்' என்று கூறினார். இனி பாடல் முழுதும்கண்டுப் பரவசமடைவோம்.

'வந்தணைந்த திருத்தொண்டர் மருங்குவர
மானேந்துகையர் தம்பால்
'நந்தி திருவருள் பெற்ற நன்னகரை'
முன் இறைஞ்சி நண்ணும் போதில்
ஐந்து புலன் நிலை கலங்கும் இடத்து அஞ்சேல்
என்பர்தம் ஐயாறு' என்று
புந்திநிறை செந்தமிழின் சந்த இசை
போற்றி இசைத்தார் புகலி வேந்தர்'

(பெரியபுராணம், திருஞானசம்பந்தர் வரலாறு)

# பிரதோஷம் பெருமையும் மகிமையும்

ச. முத்துசாமி, எம்.ஏ.,

**முன்னுரை**

அரிது அரிது மானிடராதல் அரிது, கிடைத்தற்கரியதும் மதிப்புடையதும் மனிதப் பிறவி. இப்பிறவியில் இறைவனுடைய திருவருளைப் பெற ஒவ்வொருவரும் முயற்சி செய்தல் வேண்டும். உலகத்து உயிர்களுக்கு எல்லா நலன்களையும் அருளுபவன் இறைவன். அவனை எப்பொழுதும் வாழ்த்தி வணங்குதல் உயிர்களின் கடமை. இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்றார் மாணிக்கவாசகர். இன்றுள்ள உலகியல் சூழலில் இதைச் செய்ய முடியுமா? அப்படியானால் குறிப்பிட்ட சில நாள்களிலேனும் அவனை வாயார வாழ்த்தி மனத்தினால் நினைக்க வேண்டும்.. அதற்காகத்தான் விரதங்கள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. அத்தகைய விரதங்களில் மிகவும் முக்கியமானது பிரதோஷ விரதம் ஆகும். அதன் சிறப்பை விளக்குவது இககட்டுரை.

**விரதம் ஏன்?**

நோன்புகளைக் கடைப்பிடித்தல் நோற்றல் அல்லது தவம் செய்தல் எனப்படும். இதனால் இறைவனை எளிதில் மனத்தில் நிறுததி ஞானம பெற்று வீடுபேறு அடையலாம். விரதங்கள் உடலையும் உள்ளத்தையும் காத்து அறம், பொருள், இன்பம் வீடு ஆகிய நான்கு பேறுகளையும நமக்கு அளிக்கின்றன. மேலைத் தவத்தளவே ஆகுமாம் தான் பெற்றச் செல்வம் என்பது ஔவையின் வாக்கு.

**விரதங்கள்**

சோமவாரம், சுக்கிரவாரம் போன்றவை வாரத்துக்கு ஒரு முறை வரும் விரதநாட்கள், கிருத்திகை, பிரதோஷம் போன்றவை மாத விரதங்கள்.விநாயகர் சதுர்த்தி, திருவாதிரை நவராத்திரி, மகா சிவராத்திரி. தைப்பூசம், பங்குனி உத்திரம், கந்த சஷ்டி, வைகுண்ட ஏகாதசி போன்றவைகள் ஆண்டுக்கு ஒரு முறைவரும் விரதங்கள். இவைகளை எல்லோரும் கடைப்பிடிக்கலாம்.

**பிரதோஷகாலம்**

சுக்கிலபட்சம், கிருஷ்ணபட்சம் ஆகிய இரண்டு பட்சத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரிய அஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும் அஸ்தமனத்திற்குப் பின் வருகின்ற மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ளகாலமே பிரதோஷ காலகும். இது வளர்பிறை தேய்பிறை என்ற இரண்டு பட்சங்களிலும் திரயோதகி அன்று வரும். பிரதோஷ காலம் மாலை 4.30 மணி முதல் 7,30 மணி வரை ஆகும்.

**பிரதோஷ வரலாறு**

தேவர்களும் அசுரர்களும் ஒருவரையொருவர் பகைத்துக் கொண்டு போர் புரிந்தனர். அவர்கள் நரை மூப்பு மரணம் என்ற துன்பங்கள் இன்றி என்றும் சாகாமல் இளமையோடு இருகக திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற முயற்சி செய்தனர். அசுரர்களும் தேவர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பை கயிறாகவும் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது வாசுகி என்ற பாம்பு நஞ்சை கக்கியது. கடலிலிருந்தும் நஞ்சு தோன்றியது. இரண்டும் சேர்ந்து ஆலகால விஷமாக மாறியது. தேவர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர். தேவர்கள் உய்யும் பொருட்டு கண்ணுதற் கடவுள் ஆலகால விஷத்தை உண்டருளினர், அந்த விடம் உள்ளே சென்றால் உள் முகத்தில் உள்ள ஆருயிர்கள் அழிந்து விடும். உமிழ்ந்தால் வெளி முகத்தில் உள்ள ஆருயிர்கள் அழிந்துவிடும். ஆதலால் உண்ணாமலும் உமிழாமலும் கண்டத்தில் விஷத்தைக் கொண்டுஅருளினார். அதனால் எம்பெருமான் நீலகண்டன் என்று பெயர் பெற்றார். இதை ஞானசம்பந்தர்.

'பரவி வானவர் தானவர் பலரும்
கலங்கிடவந்த கார்விடம்
வெருளஉண்டுகந்த
அருள்என்கொல் விண்ணவனே
கரவின் மாமணிபொன் கொழித்திழி
சந்துகாரகில் தந்து பம்பைநீர்
அருவிவந்தலைக்கும் ஆமாத்தூர்
அம்மானே''

என்று பாடுகிறார்.

இவ்வாறு தேவர்கள் பொருட்டு சிவ பெருமான் ஆலால விஷத்தை உண்டருளியது ஏகாதசி மாலை நேரமாகும். சிவனின் வேண்டுகோளின்படி ஏகாதசி அன்று இரவு முழுவதும் ஊண் உறக்கமின்றி தேவர்களும் அசுரர்களும் மீண்டும் பாற்கடலைக் கடைந்தார்கள். மறு நாள் துவாதசியன்று அதிகாலையில் அவர்கள் எதிர்பார்த்த அமிர்தம் கிடைத்தது. தேவர்கள் அதை உண்டு மகிழ்ச்சியினால் ஆடியும் பாடியும் பரம்பொருளை மறந்து பொழுதைப் போக்கினார்கள். பதின்மூன்றாம் நாள் திரயோதசி அன்று தேவர்கள் தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவனிடம் சென்று தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள். நீலகண்டன் மனமகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரிய திருவுளம் கொண்டு மாலை பிரதோஷ வேளையில் ரிஷபதேவரின் இருகொம்புகளுக்கிடையே நின்று அம்பிகை காணத் திருநடனம் செய்தருளினார். தேவர்கள் திரு நடனம் தரிசித்து சிவபெருமானை வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷ காலம் என்று வழங்கப்பட்டுஇன்றும் மக்களால் கொண்டாடப்பட்டு வருகிறது. அந்தப் பிரதோஷ காலம் மாதம் இருமுறை அமாவாசை மற்றும் பௌர்ணமியில் இருந்து பதின் மூன்றாம் நாள் எல்லா சிவாலயங்களிலும் கொண்டாடப்பட்டு வருகின்றது.

**பிரதோஷ விரதம் கடைப்பிடிக்கும் முறை**

வளர்பிறை, தேய்பிறை என்ற இரண்டு பட்சங்களிலும் வரும் திரயோதசி திதியன்று

அதிகாலையில் எழுந்து நீராடி சிவாலயம் சென்று வழிபட வேண்டும் அன்று முழுவதும் உணவின்றி உபவாசமாக இருக்க வேண்டும். திருமுறைகளை ஓதவேண்டும். பிரதோஷ காலமாகிய மாலை 4.30 முதல் 7-30 மணி சிவாலயம் சென்று உள்ளம் ஒன்றி ஐந்தொழுத்தை ஓதி வழிபாடு செய்யவேண் டும். சிவலிங்க மூர்த்தத்தை இடபதேவரின் இரு கொம்புகளுக்கிடையே கண்டு வணங்க வேண்டும். ஆலயத்தில் பிரதோஷ வழிபாடு முடிந்த பின் வீட்டிற்குச் சென்று உணவருந்து தல் வேண்டும்.

**பிரதோஷ வழிபாட்டின் மகிமை**

உயிர்கள் உய்யும்பொருட்டு பிரதோஷ வேளையில் திருநடனம் புரிந்த சிவபெருமானை தரிசிக்க அத்தனை தேவர்களும் கூடுவதால் அவர்களைத் தரிசித்தநற் பலனைப் பெறுவர். பிரதோஷ வழிபாட்டால் மக்களுக்கு ஏற்படும் தோஷங்கள் நீங்கி எல்லா வளமும் பெற்று இன்பமுடன் வாழ்வார்கள். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், கின்னரர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிர தோஷ காலத்தில் இறைவனை வழிபட்டதை சுந்தரமூர்த்தி சுவாமிகள்

''இயக்கர் கின்னரர் யமனோடுவருணர்
இயங்குதீவளிஞாயிறு திங்கள்
மயக்கமில் புலிவானர நாகம்
வசுக்கள் வானவர் தானவரெல்லாம்
அயர்ப்பொன்றின்றி நின்திருவடியதனை
யர்ச்சித்தாற் பெறுமாரருள்கண்டு
திசைப்பொன்றின்றி நின்திருவடியடைந்
தேன்
செழும்பொழில் திருப்புன் கூருளானே'

என்று போற்றிப் பரவுகின்றார்.

பிரதோஷ விரதம் நோற்க விரும்புகிறவர்கள் சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் ஏதேனும் ஒன்றில் வரும் சனிப் பிரதோஷம் முதற் கொண்டு தொடர்ந்து நோன்பியற்றல் சிறப்புடையது.

பிரதோஷ காலத்தில் கீழ்க்கண்ட தேவாரப் பாசுரங்களைப் பாடி வழிபட வேண்டும்.

நாகந்தான் கயிறாக நளிர் வரையதற்கு
மத்தாகப்
பாகந்தேவரொடசுரர் படுகடல்
அளறெழக்கடைய
வேக நஞ்செழவாங்கே வெருவொடு
மிரிந்தெங்குமோட
ஆகந்தன்னில்வைத் தமிர் தமாக்குவித்தான்
மறைக்காடே
—சம்பந்தர்

தாண்டகவேந்தர் அப்பர்பெருமான் அருளி நின்ற திருத்தாண்டகப்பாடல்

''காற்றாகிக் கார்முகிலாய்க் காலம்மூன்றாய்க்
கனவாகி நனவாகிக் கங்குலாகிக்
கூற்றாகிக் கூற்றுதைத்தகொல்களிறுமாகிக்
குரைகடலாய்க்குரைகடற்கோர்
கோமானுமாய்
நீற்றானாய் நீரேற்றமேனியாகி
நீள்விசும்பாய் நீள்விசும்பின் உச்சியாகி
ஏற்றானாய் ஏறுஊர்ந்த செல்வனாகி
எழும்சுடராய் எம்அடிகள் நின்றவாறே''

''பருவரை ஒன்று சுற்றிஅரவங்கை விட்ட
இமையோரிருந்து பயமாய்த்
திருநெடுமால் நிறத்தை அடுவான்விசும்பு
சுடுவானெழுந்து விசைபோய்ப்
பெருகிடமற்றிதற்கோர் பிதிகாரமொன்றை
அருளாய்பிரானே எனலும்
அருள்கொடுமாவிடத்தைஎரியாமலுண்ட
அவனண்டரண்டர் அரசே''
—நாவுக்கரசர்

''கோலமால்வரை மத்தென நாட்டிக்
கோளரவுசுற்றிக்கடைந்தெழுந்த
ஆலநஞ்சு கண்டவர் மிகவிரிய
அமரர்கட்கருள்புரிவது கருதி
நீலமார் கடல்விடந்தனையுண்டு
கண்டத்தே வைத்தபித்த நீசெய்த
சீலங்கண்டு நின் திருவடிஅடைந்தேன்
செழும்பொழில்திருப்புன்கூருளானே
—சுந்தரர்

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகப் பாடல்:

''கோலாலமாகிக்குரைகடல் வாயன் றெழுந்த
ஆலாலமுண்டானவன் சதுர்தானென்னேடி
ஆலால முண்டிலனேல் அன்றயன்மாலுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண்
சாழலோ'' —திருச்சாழல்

காரைக்காலம்மையார் :

''இனியோ நாமுய்ந்தோம் இறைவன்தாள்
சேர்ந்தோம்
இனியோரிடரில்லோம் நெஞ்சே—இனியோ
வினைக் கடலையாக்குவிக்கு மீளாப்பிறவிக்
கனைக்கடலை நீந்தினோம் காண்''

தெய்வச்சேக்கிழார்:

அடியவரோஇமையவர் தம்கூட்ட முய்ய
அலைகடல்வாய் நஞ்சுண்ட அமுதே!
செங்கண்
நெடியானும் நான்முகனும் காணாக்கோல
நீலவிட அரவணிந்த நிமலா! வெந்து
பொடியான காமனுயிர் இரதிவேண்டப்.
புரிந்தளித்த புண்ணியனே! பொங்கர்வாசக்
கடியாரும் மலர்ச் சோலைமருங்கு சூழும்
கவின்மருகற்பெருமானே காவாய் என்றும்''

பிரதோஷ வேளையில் சிவபெருமானை வணங்குவதோடு பெருமானுடைய வாகன மாகிய நந்திஎம்பெருமானுக்கும் சேர்த்து அபிசேகம் செய்து வழிபாடு செய்ய வேண்டும்.

''நந்தி எம்பெருமான் தன்னை
நாடோறும் வணங்குவோர்க்குப்
புந்தியில் ஞானம் சேரும்
பொலிவுறு செல்வம்கிட்டும்
சிந்தையில் அமைதி தோன்றும்
சிறப்புறு மக்கள் சேர்வர்
இந்திரபோகம் கிட்டும்
இணையிலா வாழ்வுதானே''

**முடிவு;**

முறையாகப் பிரதோஷ விரதத்தைக் கடைப்பிடிப்பவர்கள் வல்வினைத் தாக்குதலில் இருந்து விடுபட்டு குறைவிலா செல்வமும் பேரின்ப வீடும் பெற்று வளமுடன் வாழ் வார்கள்.



# திருக்கோயில் வழிபாடும் உட்பொருளும்

திருக்கோயில் கலைச் செல்வர்

தி. இராசமாணிக்கம்

பொள்ளாச்சி

திருக்கோயில் இறைவனுடன் ஆன்மா இரண்டறக் கலந்து ஒன்றுபடும் இடம். தன்னையே கதி என அடைக்கலம் அடைந்த அன்பர்களுக்கு இறைவன் அருட்காட்சியினை நல்கும் இடம். திருக்கோயிலுக்குச் சென்று வழிபடுவதன் பெருநோக்கங்கள் :

1. நாளுக்கு நாள் ஆசை குறைய வேண்டும்
2. நாளுக்கு நாள் அன்பு பெருக வேண்டும்,
3. தன் கடமைகளை விருப்புவெறுப்பின்றி ஆற்ற வேண்டும்.

இந்த நோக்கங்களை அடைய திருக்கோயிலில் முறைப்படி தொழ வேண்டும்; இல்லையெனில் எப்பயனும் தராது.

திருக்கோயிலுக்குச் செல்லும் முன் குளித்து, தூய ஆடை அணிந்து நெற்றியில் திருநீறு அல்லது திருமண் அணிந்து செல்ல வேண்டும். கோயிலுக்குள் வீண் வார்த்தைகள் பேசுதல் பெருங்குற்றமாம்.

கோயிலுக்குள் வெறுங்கையுடன் செல்லாது, தன்னால் இயன்றதைக் கொண்டு செல்ல வேண்டும். இறைவனைத் தொழ எடுத்துச் செல்லும் பொருட்களில் பூவைத் தான் திருவருட் செல்வர்கள் பெரும் அளவில் சிறப்பித்துள்ளனர். உதாரணமாக :

'புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அது கண்டு அருள்புரியா நிற்கும்'

என்பர் திருமூலநாயனார். அதாவது வழிபாடு இயற்றும் மெய்யன்பர்களுக்குத் தேவையான பூவும், புனலும் கிடைக்கும்; இறைவன் அதைக் கண்டு அருள்புரிவான் என்பதாம். இதைவிட பூவின் சிறப்பை வலியுறுத்த வேறு என்னவேண்டும்?

மலர்களை அலருமுன் சாத்துவதுதான் சிறப்பு. அப்போதுதான் அவை மலர்ந்துமணம் முழுமையாக இறைவனது திருமுடியின் மீது கமழும்.

ஒவ்வொரு இறைவடிவிற்கும் குறிப்பிட்ட மலர், இலை ஆகியவற்றைக் கொண்டு பூசித்தல் சிறப்பு எனப் போற்றப்படுகிறது. உதாரணமாக பிள்ளையாருக்கு அருகம்புல், திருமாலுக்குத் துளசி முதலியனவாம்.

தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, கற்பூரம் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு கோயிலுக்குச் செல்ல வேண்டும் என்பது ஆகமவிதி.

தேங்காய், வழிபடச் செல்லும் ஆன்மாவைக் குறிக்கிறது. அதன் மூன்று கண்கள் ஆன்மாவை மூடி நிற்கும் ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்களை உணர்த்தும். மேலே உள்ள கடினமான ஓடு, தூய வெண்மையான தீஞ்சுவையினை உடைய பருப்பை மூடி

யிருப்பது ஆன்மாவைக் கட்டியுள்ள பாசங்களின் கடின இயல்பைக் காட்டுகிறது. மேலே உள்ள ஓட்டைக் கையால் உடைக்க இயலுவதில்லை. அதை உடைக்கக் கருவி தேவைப்படுகிறது. ஆன்மாவை மூடிநிற்கும் மும்மலங்களை எளிதில் அகற்ற இயலாது! இறைவன் திருவருள் ஒன்றால்தான் அவற்றினின்றும் ஆன்மாவிற்கு விடுதலை கிடைக்கும் என்பதை உணர்த்துகிறது.

தேங்காயைத் தரைமீது உடைத்து சிதறுவது, மும்மலக்கட்டை அறுத்து, தன்னலத்தை அறவே நீக்கி, ஆன்மாவை இறைவனுக்கு அர்ப்பணித்து, இறைப்பணியில் ஈடுபடுவதைக் குறிக்கிறது. எனவே சிதறவிட்ட தேங்காயைத் தான் எடுப்பதும், தானே பொறுக்கி எடுத்துப் பிறருக்குக் கொடுப்பவும் குற்றம்.

நறுஞ்சுவையுடைய வாழைப்பழங்கள் அடியாரின் நல்வினைப் பயன்களை உணர்த்தும். தூய வெண் கற்பூரம் ஆசாரியரால் ஏற்றப்படும்போது ஒன்றும் மீதியாகாது காற்றுடன் இரண்டறக் கலந்து விடுவது இறைவனுடன் ஒன்றிக் கலக்கும் பக்குவம் வாய்ந்த தூய ஆன்ம நிலையைக் குறிக்கும்.

ஆன்மாக்கள் அவற்றின் பக்குவநிலைக்கு ஏற்றபடி ஆறுவகைகளாக வகுக்கப்பட்டுள்ளன. அவை அவற்றின் எதிரே குறிப்பிட்டவாறு கோயிலின் பலஉறுப்புகளை உணர்த்துகின்றன.

| | | |
|---|---|---|
| பூதான்மா | —கோபுரம் | —தூலலிங்கம் |
| அந்தரான்மா | —மகாபலிபீடம்- | பத்திரலிங்கம் |
| தத்துவான்மா | —கொடிமரம்- | துவஜலிங்கம் |
| சீவான்மா | —மூலவர் | —சதாசிவலிங்கம் |
| மந்திரான்மா | —ஆசாரியார்- | ஆன்மலிங்கம் |
| பரமான்மா | —பராவவி | —அகண்டலிங்கம் |

தூலலிங்கமாகிய கோபுரத்தை முதலில் வணங்க வேண்டும். அதிகார நந்தியின் அனுமதி பெற்றே கோயிலுக்குள் செல்ல வேண்டும்.

பத்திரலிங்கமாகிய பலிபீடத்திற்கு இப்பால் ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும் (தலை, கையிரண்டு, செவியிரண்டு, மேவாய், புயங்கள் இரண்டு ஆகியவை நிலத்தில் படவேண்டும்) பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் (தலை, கையிரண்டு, முழந்தாள் இரண்டு) செய்ய வேண்டும். இருபாலருக்கும் உரியது திரயங்க நமஸ்காரம் (தலைக்கு மேல் இரு கைகளையும் குவித்தல்). பலிபீடத்திற்கு இப்பால் வணங்கும்போது, தம் இச்சைகளைப் பலி கொடுக்க வேண்டும். பலி பீடத்திற்கும் மூலவருக்கும் இடையில் செல்லலாகாது.

திருச்சுற்றில் மூன்று முறையாவது சுற்றி வர வேண்டும். நிறைமாதக் கர்ப்பிணி, கால் விலங்கைப் பூட்டிக் கொண்டு, எண்ணெய் நிறைந்த குடத்தைத் தலைமீது வைத்துக் கொண்டு நடப்பது போன்று தரையைப் பார்த்துக் கொண்டே கால்களை மெதுவாக எடுத்து வைத்துத் திருச்சுற்றில் சுற்றி வர வேண்டும்.

பிள்ளையாரை ஒருமுறை சுற்ற வேண்டும், அவருக்கு முன்னால் நின்று மூன்று முறை தலையில் குட்டியும், மூன்று முறை தரை வரை உட்கார்ந்து தோப்புக்கரணம் போட வேண்டும். பூலோக கணங்களின் தலைவராகிய பிள்ளையாரின் கணங்கள் இதனால் அழைக்கப் பெற்று, வழிபடுவோரின் மனதைப் பண்படுத்தும். தரைவரையில் உட்கார்ந்து தோப்புக்கரணம் போடுவதால், மூலாதாரத்தில் உள்ள குண்டலினி சக்தி மேல் நோக்கிச் செல்லும். இதனால் மனம் ஒன்றச் செய்யும்.

புவர்லோகத்தின் தலைவர் அரிகர புத்திரர், சாஸ்தா, ஐயனார் என பலவாறு அழைக்கப்படுவார். அவர் முன் தொங்கும் மணியை மூன்று முறை அடிக்க வேண்டும். அதனால் அழைக்கப் பெறும் அவரது கணங்கள் வழிபடுவோரின் மனதைப் பண்படுத்தும்.

இறைவனுக்குப் பலவகையான பொருட்கள் சாத்தப்படுகின்றன. அவை பற்றிய விபரங்களும், அவற்றால் ஏற்படும் நன்மைகளும் :

| | | |
|---|---|---|
| பழவகைகள் | — | மக்களைத் தன்வயப் படுத்துதல்: |
| பஞ்சாமிர்தம் | — | நிறை ஆயுள் |
| பால் | — | அமைதி |
| தயிர் | — | உடல் வலிமை |
| தேன் | — | இசை வன்மை |
| நெய் | — | நல் வாழ்வு |
| கரும்புச்சர்க்கரை | — | கல்வி மேன்மை |
| இளநீர் | — | நன்மக்கட்பேறு |
| விபூதி | — | அறிவு |
| சந்தனம் | — | சொர்க்கபோகம் |
| பன்னீர் | — | புகழ் |

| | | |
|---|---|---|
| ஆடை | — | சம்பாவனை |
| பூ | — | மகிழ்ச்சி |
| கற்பூரம் | — | வீடுபேறு |
| குங்குமம் | — | மங்களம் |
| மாப்பொடி (அரிசிமா) | — | கடன்தீரல் |
| மஞ்சள்பொடி | — | அழகும், வசீகரமும் |
| திரவியப்பொடி | — | விவசாய விருத்தி |
| நல்லெண்ணெய் | — | கிரக பீடை நிவர்த்தி |

சைவ மற்றும் வைணவத் திருவருட் செல்வர்கள் இறைவனை எவ்வாறு துதிக்க வேண்டும் என்பதை மிகவும் அருமையாகவும், அழகாகவும் அருளியுள்ளனர். அவற்றில் ஒரு சில:

'கண்ணநீர் கொண்டு அரங்கம் கோயில்
திருமுற்றம் சேறு
செய் தொண்டர்''

என்பர் குலசேகரப் பெருமாள். தரையில் உள்ள மண் சேறாகுமாறு இறைவனை நினைந்து உருகும் கண்ணீர் பெருக்கெடுத்து ஓட வேண்டும். இறைவனை நினைந்து எவ்வாறு கசிய வேண்டும் என்பதை

'உற்று உணர்ந்து உருகி ஊறி உள்கசிய வேண்டும்' என்பர் அப்பர் பெருமான்.

சிவலிங்கத்தை மூன்று முறை சுற்ற வேண்டும். 'அவாவைப் போக்கி, அன்பைப் பெருக்கி ஆட்கொள்ள வேண்டும்' என்று வேண்டி இறைவனை வணங்க வேண்டும். அபிடேகம், நிவேதனம் செய்யும்போது உட்பிரகாரத்தில் சுற்றுதல், வணங்குதல் கூடாது. நைவேத்தியத்தைக் கீழே சிந்துவதோ, காலால் மிதிப்பதோ மாபெருங்குற்றமாம்.

தீபாராதனையின் போதுதான் கோயில்களில் அருட்பொழிவு அமோகமாகப் பெருக்கெடுத்தோடும். அவ்வமயம் பலதிறப்பட்ட அருட் சக்திகள் பண்பட்டு இறங்கும். எனவே, அது அடியார்களின் இறையன்பை அதிகரிக்கப் பெரிதும் உதவும்.

மூலவரை வணங்கிய பின், சுற்றுப்புறத் தெய்வங்களைத் தொழ வேண்டும். அன்னையையும், திருமாலையும் நான்கு முறை சுற்ற வேண்டும்.

சண்டிகேசுவரரின் திருமுன் இடது உள்ளங்கையில் வலதுகையால் மூன்று முறை தட்டி (தாளத்திரயம்) வணங்க வேண்டும். அதனால் சுவர்க்கலோகத் தலைவராகிய அவரது கணங்கள் அழைக்கப் பெற்று, வழிபடுவோரின் மனதைப் பண்படுத்தும். சிவபெருமானை



வணங்கிய பயனை நல்குமாறு அவரிடம் வேண்டிக் கொள்ள வேண்டும். அவர் மீது தான் அணிந்துள்ள ஆடையின் நூலை உருவிப் போடுதலும், அவருககும் சிவலிங்கத்திற்கும் இடையில் போவதும் குற்றமாம்.

பிரதோஷ நாளன்று 4.30 மணி முதல் 6.00 மணி வரையில் சிறப்பான முறையில் பிரதட்சணம் செய்ய வேண்டும். இது 'சோமசூக்த பிரதட்சணம்' எனப்படும். முதலில் சிவலிங்கத்தை வணங்கி, அப்பிரதட்சணமாகச் சென்று (இடமிருந்து வலம்) சண்டிகேசுவரரை வணங்கி, பிரதட்சணமாக வந்து (வலமிருந்து இடம்) சிவலிங்கத்தை மீண்டும் தொழ வேண்டும். அதன் பின் கோமுகம் (அபிடேக நீர் விழும் தொட்டி) வரை செல்ல வேண்டும். ஆனால் அதைக் கடக்கலாகாது. அப்படியே அப்பிரதட்சணமாக வந்து சிவலிங்கத்தைக் கும்பிட வேண்டும். இவ்வாறு மூன்று முறையாவது செய்ய வேண்டும்.

கடைசியாக பைரவரை வணங்க வேண்டும். ஆன்மாவை மூடியிருக்கும் மும்மலங்களாகிய ஆடையை நீக்க வேண்டியே ஆடையின்றியிருக்கும் பைரவர் கும்பிடப்படுகிறார்.

நந்திதேவரை வணங்கிய பின், பலிபீடத்திற்கு இப்பால் மும்முறை வணங்க வேண்டும். அதன்பின் துவஜலிங்கமாகிய கொடி மரத்தண்டை வடக்கு நோக்கி உட்கார்ந்து இறைவனை தியானம் செய்துவிட்டு இல்லம் திரும்ப வேண்டும்.

(குறிப்பு: திருமால் கோயில் போன்றவற்றிற்குத் தக்கவாறு மாற்றிப் பின்பற்றவும்).



# ஸ்ரீ நாலாயிர திவ்யப்பிரபந்தம் நயவுரை

டாக்டர் ஜெகத்ரட்சகன்



(14)

## பெரியாழ்வார் திருமொழி

### பிள்ளை விளையாட்டின் தொடர்ச்சி

கன்னல் இலட்டுவத்தோடு சீடை
காரெள்ளின் உண்டை கலத்தில் இட்டு
என் அகம் என்று நான் வைத்துப் போந்தேன்;
இவன் புக்கு அவற்றைப் பொறுத்திப்
போந்தான்:
பின்னும் அகம் புக்கு உறியை நோக்கிப்
பிறங்குஒளி வெண்ணெயும் சோதிக்கின்றான்
உன்மகன் தன்னை, அசோதை நங்காய்',
கூவிக் கொள்ளாய், இவையும் சிலவே.

அசோதை நங்காய்! கட்டிப் பாகுடன் சேர்ந்த இலட்டு, சீடை, காரெள் இட்டு எள்ளுருண்டையும் அவற்றுக்கு உரிய ஏனங்களிலே நிறைத்து, 'என் வீட்டில் புகுவாரில்லை' என நினைத்துக் காவலிடாமல் நான் வெளியே வந்தேன். அவ்வளவில் இப்பிள்ளை அவ் இடத்திலே எனக்கு ஒன்றும் கிடைக்காமல் தானே உண்டு போந்தான். அது போதாமல் வீட்டிலே உறியைப் பார்த்து அதில் வெண்ணெய் உண்டோ என்று ஆராய்கிறான். உன் பிள்ளை கண்ணனை உன்னருகில் வரும்படி அழைத்துக் கொள்.

சொல்லில் அரசிப் படுதி, நங்காய்!
சூழல் உடையன் உன்பிள்ளை தானே:
இல்லம் புகுந்து உன்மகளைக் கூவிக்
கையில் வளையைக் கழற்றிக்கொண்டு,
கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற
அங்கு ஒருத்திக்கு அவ்வளை கொடுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு
நான் அல்லேன் என்று சிரிக்கின்றானே.

யசோதையே! உன் மகனின் தீமைகளைச் சொன்னால் நீ சீற்றங் கொள்கிறாய். 'என் வீட்டினுள் புகுந்து, என் பெண்ணை அழைத்து அவளுடைய கை வளையை நீக்கிக் கொண்டு போய், நாவற்பழம் விற்கும் ஒரு பெண்ணுக்குக் கொடுத்து, நல்ல நாவற்பழங்களை வாங்கிக் கொண்டு, நான் 'வளை கழற்றியது நீதானா!' என்ன, 'உன் மகளின் கை வளையைக் களவு கண்டவன் நானல்லேன்; நீ கண்டாயோ!'' என்று சொல்லி, தன் கள்ளம் வெளியானதை அறிந்து கொண்டு சிரிக்கின்றான்; இதனினும் மிக்க தீமையுண்டோ?

வண்டு களித்து இரைக்கும் பொழில் சூழ்
வருபுனற்காவிரித் தென்னரங்கன்
பண்டு அவன் செய்த கிரீடை எல்லாம்
பட்டர் பிரான் விட்டுசித்தன் பாடல்
கொண்டு இவை பாடிக் குனிக்க வல்லார்
கோவிந்தன்தன் அடியார்கள் ஆகி
எண் திசைக்கும் விளக்காகி நிற்பார்
இணையடி என்தலை மேலனவே.

வண்டுகள் தேன் பருகிக் களித்து ஆரவாரங்கள் செய்யும் சோலைகள், காவிரியால் சூழ வளைந்த திருவரங்கத்தின் திருமாலை, நெஞ்சிற் கொண்டு பெரியாழ்வார் பாடின இப்பாட்டுகளைக் கொண்டு பாடினால், கண்ணனுக்கு அடியார்களாகித் தங்கள் இருப்பாலே எட்டு திக்குகளுக்கும் விளக்காக நிற்குமவர்களுடைய திருவடியிணைகள் என் முடியின் மேல் வீற்றிருக்கத் தக்கவையாகும்.

### ஆயர் மங்கையர் முறையீடு

ஆற்றில் இருந்து விளையாடுவோங்களைச்
சேற்றில் எறிந்து, வளை துகிற் கைக்கொண்டு
காற்றிற் கடியனாய் ஓடி அகம் புக்கு
மாற்றமும் தாரானால், இன்று முற்றும்;
வளைத் திறம் பேசானால், இன்று முற்றும்.

ஆற்றங்கரையில் விளையாடிக்கொண்டிருந்த எங்கள் மேல் சேற்றை விட்டெறிந்து, எங்களுடைய கை வளைகளையும், புடவைகளையும் தன் கையால் வாரிக்கொண்டு, காற்றிலும் மிக்க விரைவாய் ஓடி வீட்டினுள் புகுந்து எங்களைக் குறித்து ஒரு வாய்ச் சொல்லும் இல்லை; வாரிக்கொண்டு போன வளைதுகில் பற்றி பேச்சுமில்லை. அக்கண்ணனால் துன்பமுற்றோம் நாங்கள்.

குண்டலம் தாழ, குழல் தாழ, நாண் தாழ,
எண் திசையோரும் இறைஞ்சித் தொழுது ஏத்த
வண்டு அமர் பூங்குழலார் துகிற் கைக்கொண்டு
விண் தோய் மரத்தானால், இன்று முற்றும்;
வேண்டவும் தாரானால், இன்று முற்றும்.

குண்டலங்கள் தோளளவும் தாழ்ந்து அசைய, குழல்களும் தாழ்ந்தசைய, கழுத்தில் ஆரம் தொங்க, எண்திசைத் தேவர் முனிவர்களும் வணங்கித் துதிக்க, வண்டுகள் சூழ மலர்க் கூந்தல் இடைச்சிகளான எங்கள் புடவைகளை வாரி மரத்தின்மேல் ஏறிய கண்ணனால் இன்று வருந்தினோம்; துகிலைத் தந்தருள் என வேண்டியும் அவற்றைத் தராதவனால் இன்று வருந்தினோம்.

தடம் படு தாமரைப் பொய்கை கலக்கி,
விடம் படு நாகத்தை வால்பற்றி ஈர்த்து,
படம் படு பைந்தலை மேல் எழப் பாய்ந்திட்டு,
உடம்பை அசைத்தானால், இன்று முற்றும்;
உச்சியில் நின்றானால், இன்று முற்றும்.

பெரிய தாமரைப் பொய்கையைக் கலக்கி, நஞ்சு உமிழும் காளிய நாகத்தை வாலைப் பிடித்திழுத்து, படமெடுத்த நாகத்தின் தலையின் மீது நின்று திருமேனியை அசைத்துக் கூத்தாடின கண்ணனால் இன்று துயருற்றோம்: அக் காளியன் பட்த்தின் மீது நின்ற கண்ணனால் இன்று துயருற்றோம்.

தேனுகன் ஆவி செகுத்துப் பனங்கனி
தான் எறிந்திட்ட தடம் பெருந்தோளினால்
வானவர் கோன் விட வந்த மழை தடுத்து
ஆனிரை கர்த்தானால், இன்று முற்றும்;
அவை உய்யக் கொண்டானால், இன்று முற்றும்.

கழுதை வடிவ தேனுகன் உயிரை முடித்து அவனைப் பனைமரத்தின் பழங்கள் உதிரும்படியாக மேல் வீசி, பெரிய தோளினால் மலையை எடுத்து இந்திரன் ஏவின மழையைத் தடுத்துப் பசுக்கூட்டங்களைக் காப்பாற்றிய கண்ணனால் இன்று வருந்தினோம். பசுக்கூட்டத்தைக் காத்த கண்ணனால் இன்று வருந்தினோம்.

ஆய்ச்சியர் சேரி அளை தயிர் பால் உண்டு
பேர்த்து அவர் கண்டு பிடிக்கப் பிடியுண்டு:
வேய்த் தடந்தோளினார் வெண்ணெய் கோள் மாட்டாது அங்கு
ஆப்புண்டு இருந்தானால் இன்று முற்றும்;
அடியுண்டு அழுதானால், இன்று முற்றும்.

இடைச்சியர் சேரியிலே தயிரையும், காய்ச்ச வைத்திருந்த பாலையும் அமுது செய்து, பின் பசிய மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய அவ் ஆய்ச்சிகளின் வெண்ணெயைத் தான் நினைத்தபடி கொள்ள மாட்டாமல் அவர்கள் வீட்டில் கட்டுண்டிருந்த கண்ணனால் இன்று துயருற்றோம். அடிபட்டு அழுத கண்ணனால் இன்று துயருற்றோம்.



தள்ளித் தளர் நடையிட்டு இளம் பிள்ளையாய்
உள்ளத்தின் உள்ளே அவளை உற நோக்கிக்
கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலைஉயிர்
துள்ளச் சுவைத்தானால், இன்று முற்றும்;
துவக்கு அற உண்டானால், இன்று முற்றும்.

தளர் நடையிட்டு, இளங் குழந்தையாய் இருந்து, தன் வடிவை மறைத்துக் கள்ளத்தாய் வடிவுடன்கொல்லவந்த பேய்ச்சிமுலையுண்ணக் கொடுக்கையில் அவள் முலைப் பாலோடே உயிரையும் துடிக்கும்படியுண்டவனால் இன்று வருந்தினோம். வசையற உண்டவனாலே இன்று வருந்தினோம்.

மாவலி வேள்வியில் மாண் உருவாய்ச் சென்று
மூவடி தா என்று இரந்த இம் மண்ணினை
ஓரடி இட்டு, இரண்டாம் அடிதன்னிலே
தாவடி இட்டானால், இன்று முற்றும்;
தரணி அளந்தானால், இன்று முற்றும்.

கோவாகிய மாவலியிடம் ‘கள்ளக் குறளாய்’ வாமன வடிவம் கொண்டு, ‘என் காலாலே மூவடி தா’ என்று பெற்று, அளக்கிற அளவிலே உலகை ஓரடியிட்டு, இரண்டாம் அடியால் மேலுலகங்களடங்கலும், தனக்குள்ளாம்படி தாவி அளவிட்ட கண்ணனால் இன்று துயருற்றோம்; உலகத்தை அளந்தவனாலே இன்று துயருற்றோம்.

தாழை தண்-ஆம்பற் தடம் பெரும் பொய்கைவாய்
வாழும் முதலை வலைப்பட்டு வாதிப்பு உண்
வேழம் துயர் கெட, விண்ணோர் பெருமானாய்
ஆழி பணி கொண்டானால், இன்று முற்றும்;
தரணி அளந்தானால், இன்று முற்றும்.

தாழைகளையும் குளிர்ந்த ஆம்பல் மலர் களையுமுடைய மிகப் பெரிய ஓர் யானை, முதலை வாயிலே அகப்பட்டது. திருவாழியிலே முதலையைத் துணித்து யானையை மீட்ட விண்ணவர் பெருந்தகை கண்ணனால் இன்று வருந்தினோம். 'கைம்மாவுக்கு அருள் செய்த வனாலே இன்று வருந்தினோம்.

வானத்து எழுத்த மழை முகில் போல் எங்கும்
கானத்து மேய்ந்து களித்து விளையாடி
ஏனத்து உருவாய் இடந்த இம் மண்ணினைத்
தானத்தே வைத்தானால், இன்று முற்றும்;
தரணி இடந்தானால், இன்று முற்றும்.

வானக் கருமுகில் போல் கருநிற வராக வடிவத்தால் காட்டு நிலங்களில் திரிந்து விளை யாடி, இரண்யாட்சனைக் கொன்று நிலவுலகை மீட்டு வைத்தவனாலே இன்று துயருற்றோம். கடலில் மூழ்கிய உலகை கொட்டாற் குத்தி எடுத்துக் கொணர்ந்தவனாலே இன்று துயருற் றோம்.

அங் கமலக் கண்ணன் தன்னை அசோதைக்கு
மங்கை நல்லார்கள் தாம் வந்து முறைப்பட்ட
அங்கு அவர் சொல்லைப் புதுவைக்கோன்
பட்டன் சொல்
இங்கு இவை வல்லவர்க்கு ஏதம் ஒன்று
இல்லையே,

அழகிய தாமரைப் பூப்போல் இருக்கிற கண்களை யுடையவனைப் பற்றி அவனுடைய தாய் யசோதையிடம், பருவத்தால் இளைய பெண்கள் கண்ணன் வீட்டுக்கே வந்து முறை யிட்டனர். அவற்றைப் பெரியாழ்வார் அருளி னார். இப் பாசுரங்களை ஓத வல்லார்கட்கு ஒரு வகைக் குற்றமும் இல்லையாம்.

**அம்மம் தர மறுத்தல்**

தன்நேர் ஆயிரம் பிள்ளைகளோடு
தளர்நடை இட்டு வருவான்
பொன்ஏய் நெய்யோடு பால்அமுது உண்டு ஒரு
புள்ளுவன் பொய்யே தவழும்;
மின்நேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை
துஞ்ச வாய்வைத்த பிரானே!
அன்னே! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே.

தன்னுடன் ஆயிரம் பிள்ளைகளோடு தளர் நடை நடந்து வருகின்ற கண்ணா! பொன்னை போல் நிறமுள்ள நெய்யோடுகூட பாலையும் அமுது செய்து ஒன்று மறியாதவன் போல் தவழ்ந்து வருகின்ற ஒப்பற்ற கள்வனே! மின்னல் இடையும் வஞ்சமுடைய பூதனை மாண்டு போம்படி அவள் முலையிலே வாயை வைத்த வனே! நீ ஆயர்பிள்ளையல்ல, அருந்தெய்வம் என்பதை அறிந்து கொண்டேன். உனக்குப் பால் கொடுக்கப் பயப்படுகிறேன்.

பொன்போல் மஞ்சனம் ஆட்டி அமுது ஊட்டிப்
போனேன்; வருமளவு இப்பால்
வன்பாரச் சகடம் இறச் சாடி
வடக்கில் அகம் புக்கு இருந்து



மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை
வேற்றுருவம் செய்து வைத்த
அன்பா! உன்னை அறிந்துகொண்டேன்உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே.

உன் வடிவழகு பொன்னைப் போல் விளங்கத் திருமஞ்சனம் செய்து அமுதூட்டித் தொட்டிலில் விட்டு நீராடச் சென்றேன். அதற்குள் காலைத் தூக்கி உதைத்துச் சக டத்தை முறித்து அசுரனைக் கொன்று தள்ளி னாய். மற்றொரு நாள் நீ மின்னல் இடையை யுடைய ஒரு கன்னியைக் கலவிக் குறிகளால் வேறு வடிவையுடையளாகச் செய்திட்டாய். அன்பனே! உன்னை அறிந்து கொண்டேன், உனக்குப் பால்தர அஞ்சுகிறேன்.

கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கி
குடத்தயிர் சாய்த்துப் பருகி,
பொய்ம் மாய மருது ஆன அசுரரைப்
பொன்றுவித்து இன்று நீ வந்தாய்;
இம் மாயம் வல்ல பிள்ளை—நம்பீ ! உன்னை
என்மகனே என்பர் நின்றார்;
அம்மா உன்னை அறிந்துகொண்டேன். உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே.

கண்ணனே! குழையச் சமைத்த பருப்பை யும் வெண்ணெயையும் விழுங்கி, குடத்தில் நிறைந்த தயிரைச் சாய்த்துப் பருகி, பொய்யும் மாயச் செய்கையுமுடைய அசுர மருத மரங் களை விழுந்து முறியச் செய்து, செய்யாதவன் போல் வந்து நின்றாய். மாயச் செயல்களைச் செய்ய வல்ல பிள்ளாய்! உன்னை, உன் வாசி அறியாதவர்கள் என் வயிற்றில் பிறந்த பிள்ளையாகவே நினைக்கிறார்கள். ஆனால், நான் உன்னை நாராயணன் என்று அறிந்து

கொண்டேன். ஆகவே உனக்குப் பால்தர அஞ்சுவன்.

மைஆர் கண் மட ஆய்ச்சியர் மக்களை
மையன்மை செய்து அவர் பின் போய்
கொய்ஆர் பூந்துகில் பற்றித் தனிநின்று
குற்றம் பல பல செய்தாய்;
பொய்யா! உன்னைப் புறம் பல பேசுவ
புத்தகத்துக்கு உள கேட்டேன்;
ஐயா! உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே.

''மை அணிந்த விழிகளையும் மடத்தையு முடைய ஆயர் பெண்களை உன்பால் காதலுற அவர்கள் கொய்தல் நிறைந்த அழகிய புடவை களைப் பிடித்துக் கொண்டு அவர்கள் பின்னே போய் தனியிடத்தில் பல தீமைகளைச் செய் தான்.'' நீ தீமை செய்ததுமல்லாமல் பொய் சொல்லுபவனே! உனைக் குறித்து அறிந்து சொல்லுமவற்றை எழுதினால் பெரிய புத்தக மாக முடியும். இப்படி உன்னை அறிந்து கொண்டதால் பால் தர அஞ்சுவேன்.

முப்போதும் கடைந்து ஈண்டிய வெண்ணெயி
னோடு தயிரும் விழுங்கி
கப்பால் ஆயர்கள் காவிற் கொணர்ந்த
கலத்தொடு சாய்த்துப் பருகி
மெய்ப்பால் உண்டு அழு பிள்ளைகள் போல
விம்மி விம்மி அழுகின்ற
அப்பா உன்னை அறிந்து கொண்டேன்,
அஞ்சுவன் அம்மம் தரவே. [உனக்கு,

கண்ணா! நீ மூன்று வேளையும் இடைய றாது திரண்ட வெண்ணெயையும் தயிரையும் களவால் விழுங்கியதோடு, அவ்விடையர்தம் காவடியில் கொண்டு வந்தபால் முதலியவற்றை ஏனத்தோடு சாய்த்துக் குடித்தும், பசியடங் கினதை மறைக்க நினைத்து முலைப்பால் உண்டு, அது பெறாத போது அழுகிற பிள்ளைகள் போல் விக்கி அழுகின்ற பெரி யோனே உன்னை அறிந்து கொண்டேன். உனக்குப் பால் தர அஞ்சுவேன்.

கரும்பார் நீள் வயற் காய்கதிர்ச் செந்நெலைக்
கற்றாநிரை மண்டித் தின்ன
விரும்பாக் கன்று ஒன்று கொண்டு விளங்கனி
வீழ எறிந்த பிரானே!
கரும்பார் மென்குழற் கன்னி ஒருத்திக்குச்
சூழ்வலை வைத்துத் திரியும்
அரம்பா! உன்னை அறிந்துகொண்டேன்,
அஞ்சுவன் அம்மம் தரவே. [உனக்கு

பெரு வயலில் கரும்பு போல் எழுந்த செந்நெல் பயிரைக் கன்றுகளோடு பசுக் கூட்டம் விரும்பித் தின்கின்றன. அக்கூட்டத் துடன் மேய்கிறாப்போல நின்றது ஓர் அசுரக் கன்று. அதனை அறிந்து அதனைக் குணிலாக் கொண்டு விளாமரத்தின் பழங்கள் உதிரும்படி அக்கன்றை வீசியெறிந்த பெரி யோனே! வண்டுகள் நிறை மெல்லிய குழ லாளை அகப்படுத்திக் கொள்ள திருக்கண் களாம் வலையை, அவள் திறத்தில் விரித்து வைத்துத் திரியும் தீம்பனே! உன்னை அறிந்து கொண்டேன். உனக்குப் பால் தர அஞ்சுவன்.



மருட்டார் மென்குழல் கொண்டு பொழில்புக்கு
வாய்வைத்து அவ்ஆயர்தம் பாடி
சுருட்டார் மென்குழற் கன்னியர் வந்து
சுற்றும் தொழ நின்ற சோதி [உன்னைச்
பொருள் தாயம் இலேன், எம்பெருமான்
உன்னைப்
பெற்ற குற்றம் அல்லால்; மற்று இங்கு
அரட்டா உன்னை அறிந்துகொண்டேன்
அஞ்சுவன் அம்மம் தரவே. [உனக்கு

கேட்டவர் மயங்க வேய்ங்குழலைக் கொண்டு சோலைகளில் வாய் வைத்து ஊத, இடைச்சேரியில் பூவணிந்த மெல்லிய சுருள் குழலையுடைய இடைப் பெண்கள் குழலோசை கேட்கும் விருப்பத்தால் உன்னைச் சூழ்ந்து சேவிக்க நின்ற ஒளியனே! எமக்குப் பெரி யோனே! தீம்பனான உன்னைப் பிள்ளையாகப் பேற்ற குற்றமொன்றை ஏற்றுக் கொண்டேனே யல்லாது, வேறு பொருட்பங்கையும் பெற்றி லேன். உன்னை அறிந்து கொண்டேன். உனக்கு பால் தர அஞ்சுவன்.

வாளா ஆகிலும் காணகில்லார்; பிறர்
மக்களை மையன்மை செய்து
தோளால் இட்டு அவரோடு திளைத்து நீ
சொல்லப் படாதன செய்தாய்;
கேளார் ஆயர் குலத்தவர் இப் பழி;
கெட்டேன்! வாழ்வில்லை, நந்தன்
காளாய்! உன்னை அறிந்து கொண்டேன்
அஞ்சுவன் அம்மம் தரவே. [உனக்கு

கண்ணா! வெறுமனே இருந்தாலும் உன் மேனி மினுக்குப் பெறாதவர் உனைக் காண வேண்டார். இப்படியிருந்தாலும் நீ அயலார் பெண்களை அன்பால் மயக்கினாய்; தோளால் அணைத்தாய்! அவர்களோடு வாயால் சொல் லக்கூடாத செயல்களைச் செய்தாய். ஆயர் குலத்தவர் இப்பழிகளைக் கேளார். இப்பழி கேட்ட நான் பெரும் பாவி. இனி இவ்வூரில் வாழ்வு இல்லை. நந்தகோபர்க்கு ஆள்பட்ட பிள்ளாய்! உன்னை அறிந்து கொண்டேன். உனக்குப் பால் தர அஞ்சுவேன். (தொடரும்)

# தேனாம்பேட்டை அருள்மிகு எல்லம்மன் அருட்பாடல்கள்

புலவரேறு ஆ. ஜெ. இராமசுவாமி

### கணபதி வணக்கம்

(நேரிசை வெண்பா)

பேரரசின் நீழலிலே பீடுடனே வீற்றிருக்கும்
சீரழகார் செல்வக் கணபதியே—காரணனே
பார்போற்றும் நாற்பேறும் பல்வளமும் பெற்றுயர்
சீர்சிறப்பாய் வாழவருள் செய்.

(அறுசீர்விருத்தம்)

அரசமா மரத்தின் தண்ணிழலில்
அழகாய் அமர்ந்தொளிர் விநாயகனே!
முரசொலி முழங்க மூதறிஞர்
முறைப்படி மந்திரம் ஓதிடவும்
அரசே! ஆனை முகத்தோனே:
அன்போ டெல்லை அம்மனையாம் .
இரசமாப் பாடிட உறுதுணையாய்
இருந்தருள் புரிந்திட இசைந்தருளே.

### திருமால் மருகன் திருமுருகன் வணக்கம்

(நேரிசை வெண்பா)

செம்பொன்னெம் அம்பலவன் செல்வத் திருக்குமரா!
உம்பர்கோன் ஒண்ணெடுமால் ஓர்மருகா—அம்புவியில்
கந்தா! கடம்பா! கதிர்வேலா! எம்மருமோர்
சிந்தையுளே வந்துறைக சேர்ந்து.

### அனுமன் வணக்கம் (அறுசீர்விருத்தம்)

உலகுளோர் ஏத்தும் உயர்சீதா
இராமனல் ஒள்ளிய உத்தமற்குப்
பலநல உதவிகள் புரிந்தினிதே
பரிவோடு பணிவார் பண்புடையோய்:
நலம்புரி நற்குணக் குன்றேநல்
அனுமனே! அடிபணிந் தேத்துகின்றோம்
நலந்தரு கல்வி செல்வமுற்று
நலமாய் வாழ்ந்திட நாடுகவே.

### இரேணுகாதேவி யெனும் எல்லையம்மன் வணக்கம்

(எழுசீராசிரிய விருத்தம்)

செப்புமோர் சென்னைச் செழும் வேளாளத்
தேனாம் பேட்டைக் கெழுந்தருளி
இப்புவி மாந்த ரோடின்னுயிர் எல்லாம்
இன்பமாய் வதிந்திடக் கற்றாப்போல்
ஒப்புடன் உளமகிழ்ந் துதவிசெய் உத்தமி

இரேணுகா வெனுமெம் எல்லையம்மா!
செப்புயர் நாற்பே றுற்றிவண் செழிப்பொடு
செல்வமாய் வதிந்திடச் செய்தருளே.

### வல்வினை களைந்து வளம் அருள்க

சந்திர வதனச் சுந்தரி சங்கரன்
பங்குறை சவுந்தரி! நிரந்தரியே!
பைந்தொடி அங்கையில் பைங்கிளி கொண்டொளிர்
பகவதி! குணவதி! பார்வதியே!
செந்தமிழ் வேளாண் தேனாம் பேட்டையில்
சிந்தை மகிழ்ந்துறை எல்லையம்மா!
வந்துனை வணங்குமெம் வல்வினை களைந்தே
வளமுடன் வதிந்திட விழைந்தருளே!

சென்னையில் சிறப்புடன் விளங்குயர் கற்பகச்
செழுநகர் மயிலையைச் சேர்ந்தொளிரும்
நன்னகர் எனுமோர் நலம்புரி பவருறை
நலந்தரு தேனாம் பேட்டையிலே
மன்னியிங் கழகாய் மகிழ்ந்துறை தேவி
மாமணி யெனவொளிர் எல்லையம்மா!
பொன்னடி போற்றிப் பணிந்திடும் அடியார்
மடிமிடி பொடிபட மடிந்திடச்செய்!

ஓம்! பராசக்தியே! நம
எழில்மிகு எல்லையம்மன் இணையடி போற்றி!
போற்றி!

### விழுமிய வேளாளத் தேனாம்பேட்டை விழைந்துறை அருள்மிகு எல்லையம்மன் இன்பத் தமிழ் பக்திப்பாமாலை

குறட்பா

செல்வமொடு நீண்டாயுள் சீர்கல்வி பெற்றுய்ய
நல்லெல்லை அம்மனை நாடு.

(தரவுகொச்சகக்கலிப்பா)

ஒருபோதும் மறவாதுன் உயரியநல் திருக்கோயில்
மருவிவலம் வந்துனது மலரடியை வழுத்திடுவோம்
ஒருவாமை எமைத்தொடரும் ஊழ்வினையை ஒழித்தினிதே
இருமைக்குமாம் நாற்பேற்றை எமக்கருள்வாய் எல்லையம்மா!

காரமுகாய்ப் பருவமழை காசினியிற் பொழிந்திடவும்
ஓரழகார் நல்லொழுக்கம் ஒப்புரவும் ஓங்கிடவும்
பேரழகார் உயர்கல்வி பெருஞ்செல்வம் பெருகிடவும்
காரணியே! அருள்புரிவாய் கருமாரி எல்லையம்மா!

எல்லோரும் இல்லாமை இல்லாமல் பல்வளமும்
பல்லோரும் பன்னலமும் பாங்காகப்
பெற்றிங்கே
கல்லாமை இல்லாமல் கற்றின்பக் களிப்புடனே
எல்லோரும் எல்லாமிங் கெய்திடப்பார்
எல்லையம்மா.

மும்மலத்தால் மொத்துண்டு மோகவலைச்
சிக்குண்டு
செம்மைநலம் அறியாது சீரழிந்து கிடப்பேனை
அம்மையெம் இரேணுகா! அகம்பாவம்
அறத்தொலைத்துச்
செம்மைநெறி கடைப்பிடித்துச் சிறப்பாக
வதிந்திடப்பார்!

குவலயத்தீர்! குறள்நெறியைக்
கொன்றொழுகிக் கொலைகளவு
கவறாடல் கட்குடித்தல் கடுஞ்சினம்போர்
கடிதோடும்
அவதூறும் அகன்றோடும் ரேணுகாவை
அருச்சித்தால்
பவக்கடலைக் கடந்திடலாம் பரம்பொருளை
அடைந்திடலாம்

எங்கும்போய் கரைகாணாதெறிகடற்கண்
மீண்டுவந்து
வங்கத்தின் கூம்பமர்ந்து வருந்துமொரு
பறவையைப்போல்
சங்கடமாம் சமுசாரக் கடல்மூழ்கிக்
கிடப்பேனைச்
சங்கரியே! சாம்பவியே! காத்தருளக்
கடைக்கண்பார்.
பல்லுலகைப் படைத்தளித்துத் துடைத்துடனே
நடுநிலையில்
நல்லருள்செய் பரம்பொருள்போல் நாடிநலப்
பணிபுரியும்
நல்வேளாண் பதிதேனாம் பேட்டைநல
நகரோங்க
எல்லையம்மா! இரேணுகா! இசைந்தருள்வாய்
முகமலர்நீதே.

ஒருசிங்க வாகனத்தில் எழுந்தருளும் ஓங்காரி!
அருந்தமிழ்ப்பாட் டிசைத்திடவே அழகாக
உலாவருமெம்
பெருந்தேவி; பிணிமூப்பு சாக்காடும்
இன்றியிவண்
பெருந்திருவும் பெருவாழ்வும் பெற்றுய்யும்
வரமருளே.

புவனங்கள் புரக்கும்புவ வேஸ்வரியே!
புனிதவதி!
யவனரொடிங் கனைவருளம் ஈர்க்குமுயர்
சிலைவடிவில்
மவுனமாகக் காட்சிதரு மகேஸ்வரியே!
மனோன்மணியே
யுவவருட யுவதியுடன் வளம்உறநல்வரமருளே.

(பிறவி நீங்கிப் பேறு பெறுக)

எண்ணரிய பிறவிகளில் இனிதொளிரும்
ஏழின்மக்காள்
மண்ணுலகில் பிறந்துநொந்து மாண்டொழிந்து
போவதன்முன்
தண்ணளியார் ரேணுகாவின் தாட்புணையை
நண்ணியிவண்
திண்பிறவிக் கடல் கடந்து திருவருட்பே
றடைவீரே!

**சீர்பதிகம் ஓதுவார் சிறந்தோங்கி வாழ்வார்**

இம்மைக்கும் மறுமைக்கும் ஏழேழோர்
பிறவிக்கும்
செம்மைநலம் நல்குமுயர் சீரழகார்
ரேணுகாவாம்
அம்பிகைமேல் இராமசாமி ஆர்வமொடு
பாடியுள்ள
செம்பதிகம் செப்பிடுவோர் சிறந்தோங்கி
வாழ்வாரே.

**தீராத நோய் தீரும், தீவினைகள் போம்**

**குறட்பா**

சீரார் இரேணுகாநற் சேவடியைச் சேவித்தால்
தீராநோய் தீவினைகள் போம்.

**எல்லா உயிரும் வாழ எல்லையம்மனை ஏத்து**

பல்லுயிரும் பாங்காகப் பல்லாண்டு பார்வாழ
எல்லைநல் லம்மனை ஏத்து.

**எல்லா உயிர்க்கும் இன்னருள் ஈந்தருள்**

**எழுசீர் விருத்தம்**

உலகில் வாழும் உயிர்கள் எல்லாம்
உறுகண் இன்றி வதிந்திடவும்
நலமாய்ப் பலவளம் செழித்திட நாட்டில்
நன்மழை யாண்டும் பொழிவிப்பாய்
அலகில் கொடுமை மடமை அனைத்தும்
அடியோ டொழித்திங் கனைவருமே
நலமாய் வாழ்ந்திட எல்லையம்மா!
நல்லருள் நல்கி காத்தருளே.

**பாராட்டல் கும்மி**

**எண்சீர் விருத்தம்**

பொற்றொடி கைகளிற் பொற்புற அணிந்திரு
கால்களிற் சிலம்பணி பொற்கொடியே!
நற்றிரு நெற்றியின் நடுவினில் அற்புத
நறுமணத் திலகம் இட்டினிதே
சிற்றிடைப் பட்டினைக கட்டிக்கொண்
டழகாய்
திட்டமாய் ஊஞ்சலில் ஆடுமம்மா!
உற்றவர் பொற்பதம் பெற்றிட உதவிடும்
கற்பக நற்பதம் போற்றுவமே.

**தேம்பாங்கு (தெம்மாங்கு)**

தீராத வினைகள் தீர்க்கும்
தேனாம் பேட்டை எல்லையம்மா!
பாரா முகமே னம்மா
பகவதியெம் பார்வதியே!
ஏரார்ந்த பண்ணி நங்காய்
எம்மிசையைச் செவிமடுத்துச்
சீரார்ந்த வளங்கள் தந்து
சிறப்பாக வாழ வைப்பாய்!

---

# தீபாவளி ஏன்?

ஏ. வி. இராஜகோபால்

**திருமிகு ஏ. வி. இராஜகோபால் அவர்கள் தமிழக அரசின் பரிசு பெற்ற சிறந்த சிறுகதை ஆசிரியர் ஆவார். தீபாவளி பண்டிகை கொண்டாடுவதன் காரணம் என்ன வாக இருக்கும் என்பதை ஒரு சிறுகதை வடிவிலே வழங்கியிருக்கிறார். படித்துணரத் தக்க பயனுள்ள சிறுகதை.**

பஸ்ஸில் சரியான கூட்டம். பஸ்ஸின் முன்புறமாக ஏறிக்கொண்டேன். உதவி செய்யக்கூடிய முகமாகத் தேர்ந்தெடுத்து வடபழனிக்கு ஒரு டிக்கெட் எடுக்கச்சொல்லி காசு கொடுத்தேன்.

கூட்டத்தின் நடுவே பஸ் கண்டக்டரின் முகம் ஒரு முறை முழுமையாகத் தெரிந்தது. அட நம்ப வரதராஜனைப் போலவே இருக்கிறானே! அவனாக இருக்குமோ?

என் சிந்தனை பின்நோக்கிச் சென்றது. வரதராஜன் என்னுடன் பள்ளிக்கூடத்தில் படித்தவன். வரதராஜன் நல்ல தடிமனாக இருப்பான். அவனுக்கு 'ரோட் ரோலர்' 'ஈயக் குண்டு' என்றெல்லாம் பள்ளிக்கூடப்பெயர்கள். சடுகுடுவில் யாரையாவது பிடித்துத் தள்ளி விட்டு ஏறி உட்கார்ந்தானென்றால் அந்த பையன் 'பஜ்ஜி' தான். கீழே விழுந்து நசுங்கிய பையனை தூக்கி நிமிர்த்துவதற்குள் போது மென்றாகிவிடும். விளையாட்டுகளில் அவன் சாகசங்களுக்காக அவனைச் சுற்றி ரசிகர் கூட்டமே இருக்கும்.

அவனைச் சுற்றி இருக்கும் கூட்டம் அதற்காக மட்டுமில்லை. அவன் அவ்வப்போது உதிர்க்கும் 'புரட்சி' கரமான கருத்துகளுக்கும் தான் என்று எனக்குப்பின்னால்தான் தெரிந்தது. நாங்கள் படித்த பள்ளி சென்னை முத்தியாலு பேட்டை மண்ணடிக்குப் பக்கத்தில் இருந்தது. அந்தக்காலத்தில் எங்களுக்கு நன்னெறி வகுப்பு என்று ஒன்றிருந்தது. அதற்கு திருமலாச்சாரியார் என்பவர் ஆசிரியர். நல்ல ஆசாரசீலர். பஞ்சகச்சம் கட்டியிருப்பார். குடுமி வைத்திருப்பார். நெற்றியில் 'பளிச்' சென்று திருமண். ஒருமுறை அவர் மாணவர்களைத் தங்கள் தந்தையரைப் பற்றி சொல்லச் சொன்னார். ஒரு மாணவன் தன் தந்தை வக்கீலாக இருக்கிறார் என்றான். ஒருவன் தன் தநதை மதுரையில் வங்கியில் வேலையிலிருப்பதாகச் சொன்னான். இப்படியாக ஒவ்வொருவராகச் சொல்லி வந்தார்கள். வரதராஜன் முறை வந்தது. அவன் 'எங்கப்பா மண்ணடியில் இருக்கிறார், சார்' என்றான். 'மண்ணடியில் என்னடா பண்ணுகிறார்!' திருமலாச்சாரியார் கேட்டார். வரதராஜன் பதில் சொல்லாமல், 'கிக்கி..' என்று சிரித்தான். ஆசிரியருக்கு கோபம் வந்தது. 'ஏண்டா, சிரிக்கிறே!' என்று அதட்டினார். வரதராஜனுக்கு அவருடைய கோபத்தைப் பார்த்து மேலும் சிரிப்பு வந்தது. சிரித்துக் கொண்டே சொன்னான். 'மண்ணடி யின்னா, மண்ணடி இல்லை சார். மண்ணுக்கு அடியிலே சார்....' அவன் சொன்னதைக் கேட்டு மற்ற மாணவர்களாகிய எங்களுக்கு என்னவோ மாதிரி ஆகிவிட்டது. இறந்து போன தந்தையைப்பற்றி இப்படியா ஒருத்தன் ஜோக் அடிப்பான்! திருமலாச்சாரியார் கோபத்தில் அவனை அன்று பிரம்பினால் விளாசிவிட்டார்.

அன்று முதல் வரதராஜனுக்கும் திருமலாச்சாரியாருக்கும் விரோதம் வளர்ந்துகொண்டே வந்தது. திருமலாச்சாரியார் முதுகு திரும்பும் போது எல்லாம் அவர் நடை, உடை, தோற்றத்தைக் கேலி செய்வான் வரதராஜன். ஒரு முறை திருமலாச்சாரியார் வரதராஜனை தீபாவளியைப் பற்றி பேசச் சொன்னார் வரதராஜன் ஆரம்பித்தான். 'தீபாவளி ஒரு காட்டுமிராண்டிகளின் பண்டிகை, பண்பற்றவர்கள் கொண்டாடும் திருவிழா. ஒருவன், அவன் மனிதனோ, அரக்கனோ, தவறுகளுக்காக அவன் அழிக்கப்பட்டானென்றால் அந்நாளை-அவன் அழிவு நாளை இனிப்பு உண்டு புத்தாடை உடுத்தி விழாக்கொண்டாடுவது என்ன நாகரிகம்! என்ன மனித நேயம்! இவர்களா மனிதர்கள்? சரியான காட்டுமிராண்டிகள்! .. ''. வரதராஜன் பேசிக்கொண்டே போனான். 'டேய், டேய், பாவி.. மகா பாவி.. நிறுத்துடா!' திருமலாச்சாரியார் கண் சிவக்கக் கத்தினார்.

அன்று வரதராஜன் பேசியது தவறு என்று பட்டாலும், உள் மனதிற்குள் அவன் பேசியதிலும் ஏதோ ஒரு உண்மை இருப்பது போல் ஒரு குடைச்சல், பள்ளி நாட்களுக்குப் பிறகு வந்து போன இருபது தீபாவளி நாட்களின் போதும் அதைக் கொண்டாடும் போதும் ஏதோ தவறு செய்வது போல் ஒரு உறுத்தல்.

அந்த வரதராஜனா இந்த கண்டக்டர்? எனக்கு அவனுடன் பேச வேண்டும்போல் ஒரு தீவிர ஆவல் தோன்றியது. எல்லாவற்றையும் விட அவனுடைய தீபாவளி பற்றிய கருத்துக் களில் ஏதாவது மாற்றம் உண்டா என அறிய ஆசையாக இருந்தது.

'ஏன் சார், முன்னாடிதான் இடமிருக்கே, போங்களேன்....' பின்னால் ஒருத்தன்நெட்டித் தள்ளினான்.



பஸ்ஸில் கூட்டம் கொஞ்சம் குறைந்திருந்தது. ஆனால் பஸ் எதற்கோ நின்று விடவே, பஸ்சிற்குள் ஒரே புழுக்கம்.

'ஏன் பஸ் நின்றுவிட்டது! நின்றபடியே வளைந்து ஜன்னல் வழியே பார்த்தேன். வெளியே, எதிரே, ஒரு பெரிய சாவு ஊர்வலம், பலர் கொட்டுக்குத் தகுந்தாற்போல் குடித்து விட்டு வெறித்தனமாக ஆடிக்கொண்டு வந்தார்கள். ஒரே விசில் சத்தம். வாண வேடிக்கை, முன்னதாக ஒருத்தன். சைக்கிள் ரிக்ஷாவில் உட்கார்ந்து கொண்டு கூடையிலிருந்து பூக்களைத் தெருவில் வாரி இறைத்துக்கொண்டே போனான்.

ஊர்வலம் நெருங்கவும் பிணத்தின் முகத்தைப் பார்த்தேன். இளம் வயதுதான் இருக்கும். முகத்தில் 'ரேபான்' கண்ணாடி, சுருட்டை சுருட்டையாக கறு கறுவென தலைமுடி, பார்க்கப் பாவமாக இருந்தது.

பஸ்சிலிருந்து கண்டக்டர் உட்பட பலர் எட்டிப்பார்த்தார்கள். இப்போது கண்டக்டரின் ஒரு பக்க முகம் தெரிந்தது. அதிலே ஒரு பெரிய காயத்தின் தழும்பு தெரிந்தது. இது உண்மையிலேயே வரதராஜன் தானா! எனக்குச் சந்தேகமாக இருந்தது. வடபழனி பஸ் டர்மினஸ்சில் இறங்கி அவனுடன் பேசிப் பார்த்துவிடவேண்டியதுதான்.

ஒவ்வொரு பஸ் ஸ்டாப்பிலும் பயணிகள் இறங்கவும் பஸ்சில் கூட்டம் குறைந்து கொண்டே வந்தது. நான் பஸ்சின் பின்புறமாக நகர்ந்து கண்டக்டருடன் பேசுவதற்காக அவனை நெருங்கினேன்.

நான் அவனை நெருங்கிய சமயம் அவன் டிரைவர் பக்கம் திரும்பி 'அண்ணே, வண்டியை ஒரு நிமிஷம் ஓரங்கட்டண்ணே' என்று சொல்லிவிட்டு பஸ் நிற்பதற்குக்கூட காத்திராமல், 'தட தட'வென இறங்கி ஓடினான்.

எனக்கு அவன் செய்கை ஆச்சரியமாக இருந்தது. இது என்ன? பஸ் ஸ்டாப்கூட இல்லை? பஸ்ஸை திடுமென நிறுத்தச் சொல்லி இவன் இறங்கி எங்கே ஓடுகிறான்! பார்த்தேன்.

அவன் அவசர அவசரமாக ஒரு கடைக்கு ஓடினான். அங்கே ஒரு தேங்காய் வாங்கினான். அடுத்து நடைபாதையிலிருந்த ஒரு சிறிய பிள்ளையார் கோவிலுக்கு முன் சென்று அந்த தேங்காயை சிதறு காயாக விட்டான். மறுபடியும் பஸ்சிற்கு ஓடிவந்து ஏறிக்கொண்டு 'ரைட்ஸ்' சொல்லிவிட்டு டிரைவரிடம் பேசப் போய் விட்டான்.

எனக்கு அவனுடைய செய்கை அதிர்ச்சியாக இருந்தது. 'இது என்ன வரதராஜனா? நிச்சயமாக இருக்க முடியாது' என்று நினைத்துக் கொண்டேன்.

வடபழனி பஸ்டெர்மினஸ்சில் திரும்பும் சமயம், டிரைவர் உள் பக்கம் திரும்பி 'வரதா, நா டீக்கடையில் இருக்கேன். அங்கே வந்துரு' என்று சொல்லி வண்டியை ஓடித்தான்..எனக்கு தூக்கி வாரிப்போட்டது. அப்படியென்றால் இது வரதராஜன்தான்! வரதராஜனா இப்படிச் செய்தான்?

நேராக வீட்டிற்குப் போக நினைத்தநான் மனதை மாற்றிக் கொண்டேன். கையில் பஸ் டிக்கெட்டுகளுடன் கணக்கு கொடுக்கப்போன வரதராஜனை வேகமாக பின் தொடர்ந்தேன். 'ஏங்க!'...என் குரல் கேட்டு வரதராஜன் நின்றான்.

'ஏங்க, நீங்க டவுன்லே மண்ணடியிலே இருக்கே, அந்த ஸ்கூல்லேதானே படிச்சீங்க!'

'ஏங்க வரதராஜன்! திருமலாச்சாரி கிளாஸ் ஞாபகமிருக்கா?'

'வரதராஜா, ஒன்னை 'ரோட் ரோலர், ஈயக்குண்டுன்னு எல்லாம் கூப்பிடுவாங்களே! ஞாபகம் இருக்கா!''

இப்படியெல்லாம் கேட்கவேண்டுமென நினைத்திருந்தேன். ஆனால் பஸ்சிலிருந்து இறங்கி அவன் பிள்ளையாருக்கு தேங்காய் உடைத்து வந்ததைப் பார்த்த பாதிப்பு மனதில் தயார் செய்து வைத்திருந்த கேள்விகளை அமுக்கிவிட்டது.

'என்ன!' வரதராஜன் பொறுமையின்றிக் கேட்டான்.

நான் சுதாரித்துக் கொண்டேன்.

'ஏங்க பயணிகளை பஸ்சிலே வெச்சிக்கிட்டு, பஸ்ஸை நிறுத்திவிட்டு பிள்ளையார் கோவில்லெ தேங்கா ஒடைக்கப் போயிட்டீங்க!'

என் கேள்வியை அவன் எதிர்பாராமலிருக்க வேண்டும். முதலில் கோபமாக ஏதோ சொல்ல ஆரம்பித்தவன், என்னை மேலும் கீழுமாகப் பார்த்து அடங்கினான். நான் கேள்வி கேட்ட தோரணை என்னை ஒரு மேலதிகாரியாக நினைத்துப் பார்க்க வைத்து அவனுக்குள் ஒரு பயத்தை தோற்றுவித்திருக்க வேண்டும். நல்ல வேளையாக என்னை அவனுக்கு ஒரு பள்ளித் தோழனாக நினைவில் வரவில்லை.

தாழ்ந்த குரலில் மரியாதையுடன் சொன்னான். 'இல்லீங்க, இந்த ரூட்லெ மூணு வருஷமா நா வேலெ செஞ்சிகிட்டிருக்கேங்க, சர்வ சாதாரணமா 'பீக் அவரிலே' நாலு கேடிப் பயலுக ரொம்ப பிரமாதமா 'டிரஸ் பண்ணிட்டு வந்து பாவம் அப்பாவி ஜனங்ககிட்டே 'பிக் பாக்கெட் அடிப்பாங்க சார். அவுங்களெ எனக்கு நல்லா அடையாளம் தெரியும். நான் ஆரம்பத்திலெ அவுங்க பஸ்சிலே ஏறிட்ட உடனே ஜனங்களை ஜாடை மாடையா எச்சரிக்கை பண்ண ஆரம்பிச்சேன், அதுக்காக ஒரு நாளெக்கி நா வீடு திரும்பறச்சே அந்த நாலு பேரும் என்னை வளெச்சி,. மடக்கி கத்தியாலெ முகத்திலெ குத்திட்டாங்க. இதப் பாருங்க, மொகத்திலெ வடு.' அவன் முகத்தைத் திருப்பி காண்பித்து விட்டு தொடர்ந்தான். அதுக்காக நா போலீசிலே புகார் பண்ணினேங்க. நம்ப ஆபீசிலேயும் சொன்னேன். ஒண்ணும் நடக்கலெ. ஆனா இவுங்க அயோக்கியத்தனம் நடந்துட்டே இருக்கும். இவுங்க கை வரிசையைக் காட்டிவிட்டு இறங்கிப் போவாங்க. அடுத்த ரெண்டாவது நிமிஷம் பர்ஸை பறிகொடுத்த ஆளுங்க பரிதாபமா அலறுவாங்க. பஸ்சிலே அவுங்க அதுமாதிரி அலறதைப் பார்த்து என் மனசிலெ ரத்தம் வடியும். திருட்டுப் பயலுக, பஸ்சிலே ஏறியிருக்காங்கன்னு தெரியும். திருடப் போறாங்கன்னு தெரியும். 'அப்படியும் என்னாலெ ஒண்ணும் செய்ய முடியலேங்கிறபோது என் மனம் 'ஓ'ன்னு அழும். இந்த மாதிரி படுபாவிகளுக்கு சாவு வராதான்னு தோணும். சாவு சீக்கிரம் வரணுமேன்னு தோணும். இப்பொ நாம்ப பஸ்சிலே வரச்சே ஒரு சாவு போச்சு பாருங்க. அந்த பொணம் வேறுயாருமில்லீங்க. அந்த நாலு பேரிலே ஒருத்தனுங்க, அதெப் பாத்த ஒடனெ, சும்மா சொல்லக் கூடாதுங்க, எனக்கு மனசு முழுசுமா சந்தோஷத்தாலெ நெறஞ்சாப்பிலே இருந்ததுங்க. எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலே. சாமிக்கு ஒடனெ நன்றி சொல்லிடணும்னு தோணிச்சுங்க...அதான் ஐயா என்னை மன்னிச்சிருங்க....''

அவன் குரல் தழு தழுத்தது.

எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவனைப் பார்க்கப் பாவமாக இருந்தது. அந்த சந்தர்ப்பத்திலே, நான் அவனுடன் பள்ளிக்கூடத்தில் படித்தவனென்று சொல்லி அவனுடைய பள்ளிக்கூட நாட்களை நினைவுபடுத்தி, அவனுடைய பெருமைகளையும் ஞாபகப்படுத்தி அவனைச் சங்கடப்பட வைக்கத் தோன்றவில்லை.

'வரேங்க, வரதராஜன்' நீங்களும்தான் என்ன பண்ணுவீங்க!' நான் சொல்லிவிட்டு நகர்ந்தேன். தன் பெயர் எனக்கு எப்படித் தெரிந்தது என்று புரியாமல் என் முதுகுப் பின்னால் அவன் விழித்து நிற்பதை நான் கற்பனை செய்து கொண்டேன்.

பாதி வழியில் தான் ஞாபகம் வந்தது. டக்கென நின்றேன். தீபாவளியைப் பற்றிய அவனுடைய கருத்துகளில் ஏதாவது மாற்றம் உண்டா என்று கேட்கவில்லையே என்பது நினைவில் வந்தது. அதைத் தொடர்ந்துஅவன் தன் செய்கையின் மூலமாகவே அதற்கு இன்று பதிலளித்து விட்டது மூளையில் சுரீர் என உறைக்கவே மனதிற்குள்சிரித்துக் கொண்டேன். நடையைத் தொடர்ந்தேன்.

---

# அப்பனும் ஆசாரியரும்

## அமரர் நா, வேணுகோபால் நாயக்கர்

**சென்ற இதழின் தொடர்ச்சி...**

சிறுவனாக வந்து தன் மனைவிக்கு உதவியவர் திருவேங்கடவரே என அறிந்த அனந்தாழ்வான் திகைத்துவிட்டார்.

திருவேங்கடவரின் முகவாய்க் கட்டையில் பச்சைக் கற்பூரம் வைத்து வைத்யம் செய்யவும் ரத்தம் நின்றது.

அனந்தாழ்வானின் மலர்த் தொண்டினை இப்படி வெளிப்படுத்தினார் வேங்கடவர்.

இதை நினைவூட்டும் வகையில் இன்றும் திருவேங்கடவரின் முகவாய்க் கட்டையில் பச்சைக் கற்பூரம் ஒத்தடம் வைத்திருப்பதைச் சேவித்து மகிழலாம்.

திருஅனந்தாழ்வான் கைங்கரியம் இயற்றிய மலர்க் கூடையும் கருவறையின் சேவையில் உள்ளது.

இன்னொரு விசேடம்.

இப்படியாகத் திருவேங்கடவருக்கு மலர்த் தொண்டை ஏற்படுத்திய ஸ்ரீராமானுஜருக்கும் சிறப்புச் செய்ய வேண்டுமல்லவா!

திருமலையில் புட்பம் அணிவது அபசாரம். திருவேங்கடவர்தான் திருமலையில் புட்பம் அணியலாம். அவர் அணிந்த மலர்களை யாருக்கும் விநியோகிக்க மாட்டார்கள். திருவேங்கடவர் அணிந்த மாலைகளை அப்படியே கொணர்ந்து அருகில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமாநுசருக்கு அணிவிப்பார்கள்.

பிறகு அம்மாலைகளை எடுத்துப் போய் வெளிப் பிரகாரத்தில் ஒரு கிணற்றில் போட்டு விடுவார்கள்.

ஸ்ரீநிவாசன் என்ற வடமொழித் திருநாமத்தைத் தமிழ்ப்பாவில் மொழி பெயர்க்கின்றார் நம்மாழ்வார்.

'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா'

இலக்குமியின் வாசம் எப்போதும் பொருந்தியிருப்பவன் என்பது ஸ்ரீநிவாசன் என்பதன் பொருள்.

மற்ற சந்நிதிகளில் தாயார் சந்நிதி தனியாக உண்டு. திருமலையில் தனியாகத் தாயார் சந்நிதி கிடையாது.

இலக்குமிதான் பெருமாளுடைய திருமார்பில் எழுந்தருளியுள்ளாளே! மற்ற சந்நிதிகளில் வடிவாய் வலமார்பினில் வாழும் மங்கையாக வலப்புற மார்பில் மட்டும் எழுந்தருளியிருப்பாள். ஸ்ரீநிவாசன் என்ற திருப்பெயருடன் திருமலையில் எழுந்தருளியுள்ளதால் ஸ்ரீராமநுசர் திருமகளை இடமார்பிலும் எழுந்தருளிவித்தார்.

இன்றும் திருவேங்கடத்தில் ஸ்ரீனிவாசன் வலது, இடது இரு திருமார்பிலும் இலட்சுமி எழுந்தருளியிருப்பதைச் சேவித்து மகிழலாம்,

108 பாடல்கள் அமைந்த ராமாநுச நூற்றந்தாதியை இயற்றிய திருவரங்கத்து அமுதனார், முதல் பாட்டிலேயே ராமாநுசருக்கு அணிவிக்கும் அடைமொழி 'மாறன்' அடி பணிந்து உய்ந்தவன்.' அதாவது நம்மாழ்வாருடைய திருவடிகளைப்பணிந்து சிறந்தவர். நம்மாழ்வார் திருவேங்கட மலையில் செய்ய வேண்டுவதை நியமிக்கின்றார்.

'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில்
கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே!'

ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவுஇலா அடிமை செய்வதற்காக ராமாநுசர் திருமலையில் ஒரு மடத்தை நிறுவி அதன் தலைவராக ஒரு ஜீயரை நியமித்தார்.

அந்த பெரிய ஜீயர் திருப்பரம்பரை இன்றும் பிரகாசித்து வருகிறது.

புரட்டாசி மாதம், திருஓண நட்சத்திரம் மிகவும் புனிதமானது. திருவேங்கடமுடையான் திரு நட்சத்திரம். ஆண்டு விழாக் கண்டருளி தீர்த்தவாரி கொண்டாடும் நாள். இப்புனித புரட்டாசித் திருவோண நன்னாளில் தான் வேதாந்ததேசிகர் அவதரித்தார்.

இவருடைய திருத்தாயார் தம் திரு வயிற்றில் திருமலை திருவேங்கடவரின் திருமணி

புகுவதாகக் கனாக்கண்டு. பிறகு கர்ப்பமுற்று இவர் திருவவதரித்தமையால் திருமலையில் திருமணியின் அம்சமாக அவதரித்தார் எனக் கொண்டாடப்படுகிறார். திருவேங்கடமுடையானின் திருமணி எப்படிக் கம்பீரமாக 'கோவிந்தா'! 'கோவிந்தா' என ஒலிக்கின்றதோ அப்படியே வேதாந்த தேசிகனும் நாடும் நகரமும் நன்கறிய ஸ்ரீராமாநுச தரிசனத்தைப் பல வடமொழி தென்மொழி நூல்கள் மூலம் பிரகாசித்தார்.

எனவே, திருமலையில் திருமணி ஓசையைக் கேட்டாலும் திருமணியை சேவித்தாலும் வேதாந்த தேசிகரின் புனித ஞாபகம் வருகிறது. வேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகளுடன் புகழ் பெற்ற ஆசாரிய பரம்பரை முடிவு பெறுகிறது.

மணவாள மாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளும் முன்பே, அவருடைய பரிமளம், திருவேங்கடமுடையானுக்கு எட்டிவிட்டது.

திருமலையில் பிரதிவாதி பயங்கரம் அண்ணன் என்னும் மகான் காஞ்சியிலிருந்து திருமலைக்கு எழுந்தருளி திருவேங்கடவருக்கு நாடோறும் ஆகாச கங்கையிலிருந்து திருவாராதனத்துக்கும், திருமஞ்சனத்துக்கும் தீர்த்தம் கொணர்ந்து அளித்துக் கொண்டிருந்தார்.

திருவரங்கத்திலிருந்து திருமலைக்கு மணவாளமுனிகளின் சீடர் ஒருவர் எழுந்தருளினார். அவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணனிடம் மணவாள மாமுனிகளின் பெருமைகளை எடுத்துரைக்கலானார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனுக்கு மணவாள மாமுனிகள் மீது அதிக பக்தி ஏற்பட்டு விட்டது.

மறுநாள் ஆகாசகங்கைக்குத் தீர்த்தம் கொணரப் போகும்போது மணவாளமாமுனிகளின் பெருமைகளையே நினைத்தவண்ணம் எழுந்தருளினார்.

தீர்த்தத்தை இல்லம் கொணர்ந்து மறுபடியும் மணவாள மாமுனிகளின் பெருமைகளையே கேட்டு ஆனந்தப்படலானார்.

தீர்த்தத்தில் வழக்கப்படி சேர்க்க வேண்டியபரிமளத் திரவியங்களைச் சேர்க்காமலேயே ஸ்ரீமணவாள மாமுனிகளின் பெருமைகளைப் பேசிக் கொண்டும் கேட்டுக் கொண்டும் காலம் செலுத்தினார்.

திருவேங்கடவருக்குத் திருவாராதனை சமயம் நெருங்கி விட்டது. பிரதிவாதி பயங்கரம் அண்ணன் தீர்த்தத்தில் பரிமளப் பொருட்களைச் சேர்த்துக் கொண்டு போகவும் இல்லை. திருவேங்கடமுடையான் சந்நிதியிலிருந்து ஒரு அர்ச்சகர் ஓடி வந்து நேரமாகி விட்டதற்கு மிகவும் கோபித்துக் கொண்டு, பரி



மளம் சேர்க்காமல் இருந்த ஆகாச கங்கைத் தீர்த்தத்தையே கொண்டுபோய் விட்டார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் 'அபசாரம் நேர்ந்து விட்டதே. ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டிய திருப்பணியில் வழு நேர்ந்து விட்டதே' என மிகவும் மனம் புழுங்கி சந்நிதி அடைந்தார்.

திருவேங்கடமுடையான், பரிமளம் சேர்க்காமலேயே மணவாளமாமுனிகளின் நினைவாகவே திரட்டிய தீர்த்தத்தை பரம மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்.

அர்ச்சகர் மூலமாகத் திருவுள்ளம் பற்றினார்.

'இத்தனை நாளாகக் கொணர்ந்த தீர்த்தத்திலும் ருசியும், பரிமளமும் இன்று மிக அதிகமாக இருக்கிறதே; உம்முடைய பக்திக்கு நாம் உகந்தோம்; ஒருவித மனக் கசப்பும் வேண்டாம்' என்றார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனின் மகிழ்ச்சி அளவு கடந்து விட்டது.

மணவாள மாமுனிகளின் வைபவங்களை செவி ஏற்றுக் கொண்டே இன்று தீர்த்தம் பூரித்ததனால், இதுவே இன்றைய அதிக பரிமளத்திற்கும் ருசிக்கும், திருவேங்கடமுடை

யானின் உகப்பிற்கும் காரணம் எனத் தெளிந்து கொண்டார்.

எனவே திருவேங்கடமுடையானுக்குத் தீர்த்தக் குடம் எழுந்தருளினாலும், திருமஞ்ச னம் திருவேங்கடவர் கண்டருளினாலும், திரு மலையில் தீர்த்தம் பிரசாதித்தாலும் மணவாள மாமுனிகளின் சிறந்த நினைவு வருகிறது.

மணவாள மாமுனிகள் திரு மலைக்கு எழுந்தருளினார். பிரதிவாதி பயங்கரம் அண் ணனும் மாமுனிகளுடன் எழுந்தருளினார்.

மணவாள மாமுனிகள் மிகவும் சத்துவ குணமுடையவர்; சாது; அடக்கமானவர்.

தாம் அவதரித்த ஆழ்வார் திருநகரியில் ஸ்ரீராமாநுசருக்கு சந்நிதி ஏற்படுத்தினார். தமக்கும் ஒரு சந்நிதி ஏற்படுத்த வேணுமென்று சீடர்கள் வேண்ட, ஒரு ராமாநுச பாத்திரத்தை அளித்து, அந்த பாத்திரம் செய்யப்பட்ட சிறிய அளவு செம்பில், சிறிய வடிவம் அமைத்துக் கொள்ள இசைந்தார்.

திருவரங்கத்தில் காலட்சேப மண்டபம் அமைத்தபோது அதற்குத் தம் ஆசாரியன் பெயரால் 'திருமலையாழ்வார் திருமண்டபம்' எனத் திருப்பெயர் சூட்டினார்.

அப்படி அமைந்த திருமண்டபத்திலே பிள்ளை லோகாசாரியர் திருமாளிகையில் நின்றும், 'ரகஸ்யம் விளைந்தமண்' என்று திருமண்ணைக் கொண்டு வந்து காலட்சேபக் கூடத்திற்குக் காப்பிடுவித்தார்.

திருவரங்கத்தில் தமக்கு ஒரு சந்நிதி அமைத்தாலும், பெரிய பெருமாள் ஆழ்வார் ஆசாரியர்களுக்கு எதிராக தமக்கு ஒருவிதத் திருவீதிப் புறப்பாடு விழாவும் கூடாதென்று நியமித்துவிட்டார்.

இத்தகைய அடக்கமே உருவான மண வாளமாமுனிகளுக்கு, திருவேங்கடமுடை யானுக்கு சுப்ரபாத கீதமும், தோத்திரமும் இயற்றிச் சமர்ப்பிக்க வேண்டுமென்று, திரு வேங்கடமுடையானைச் சேவிக்க எழுந்தருளிய போது தோன்றியது. மணவாளமாமுனிகள் தாமே சுப்ரபாத கீதத்தையும், தோத்திரத்தை யும் அருளாமல் அருகில் இருந்த பிரதிவாதி பயங்கரம் அண்ணனுக்கு இப்பாடல்களை அருளும்படிக்பணித்தார்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணனும் மண வாள மாமுனிகளின் நியமனத்தைச் சிரமேற் கொண்டு திருவேங்கடவர் திருமுன்பே வட மொழியில் ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதத்தை யும், ஸ்ரீவேங்கடேஸ்வர் தோத்திரத்தையும் மிகவும் இனிமையான சந்தத்திலும், கம்பீர மான நடையிலும் அருளிச் செய்தார்.

எனவே, திருமலையில் ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதம் ஸ்ரீவேங்கடேஸ்வர தோத் திரத்தையும் சேவிக்கும்போது ஆசார்யர் களான ஸ்ரீமணவாள மாமுனிகள், ஸ்ரீபிரதி வாதி பயங்கரம் அண்ணன் நினைவுகள் நம்மை பக்திப் பரவசம் அடையச் செய்யும்.

திருமலையில் என்ன? ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதமும், ஸ்ரீவேங்கடேச தோத்திரமும் தற்காலத்தில் கேட்காத இடமே இல்லை.

எனவே இத்திருப்பாடல்களைச் சேவிக் கும் போதெல்லாம் திருவேங்கடமுடையான், மணவாளமாமுனிகள், பிரதிவாதி பயங்கரம் அண்ணன் மூவருடைய ஆசியும் நமக்கு ஒரு சேரக் கிடைக்கின்றன.

ஸ்ரீராமானுசர், திருமலையில் ஜீயர்மடம் ஏற்படுத்தியதை முன்பு அறிந்தோம். ஒரு சில சமயங்களில் ஜீயர் திருமேனிப்பாங்காக இல் லாத போதும், பரமபதித்துவிட நேர்ந்த போதும், வேறு ஜீயர் திருப்பணியை ஏற்கக் காலம் தாழ்த்தியது.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் என்பது நம்மாழ்வார் நியமனம். அதற்காக மணவாள மாமுனிகள் திருமலையில் சின்ன ஜீயர் மடத் தையும் ஏற்படுத்தினார். எந்தக் காரணத்தி னாலாவது பெரிய ஜீயர் கைங்கர்யம் புரிய இயலாமற்போனால், ஒருவிதத் தாமதமும் இன்றி அதை ஏற்றுக் கொள்ள சின்ன ஜீயர் ஸ்தானம் திருமலையில்தான் உள்ளது.

திருவரங்கத்தை மிகவும் அபிமானித்திருந் தார் ஸ்ரீராமாநுசருக்கு பின் வந்த ஆசாரிய ரான பட்டர் என்பவர். இவர் கூரத்தாழ் வானின் திருக்குமாரர்.

திருவரங்கத்தில் பட்டர் காலட்சேபம் சாதித்துக் கொண்டிருக்கிறார். அது சமயம் திருமலையிலிருந்தும் ஒரு ஸ்ரீவைணவர் எழுந் தருளினார். பட்டருக்கும், காலட்சேப கோஷ்டிக்கும் தண்டன் சமர்ப்பித்து அமருகை யில் 'திருவேங்கடம், திருவேங்கடம்' என்று கூறிக் கொண்டே அமர்ந்தார்.

''திருவரங்கம் காலட்சேப கோஷ்டியில் 'திருவேங்கடம்' என்பதா!' என்று பட்டர் வினவினார். திருமலையிலிருந்து வந்த பக்தர் திருமலைக்குச் சென்று அவ்விடம் தம் ஆசாரிய னிடம் இந்த விஷயத்தை விண்ணப்பித்து, மறு படியும் திருவரங்கம் எழுந்தருளி, முன் போலவே பட்டருடைய காலட்சேப கோஷ்டி யில், 'திருவேங்கடம், திருவேங்கடம்' என்று உச்சரித்துக் கொண்டே அமர்ந்தார்.

பட்டர் மறுபடியும் 'என்ன இப்படி திரு வரங்கத்திலும், திருவேங்கடத்தை உச்சரிப் பதா!'' எனக் கேட்டார்

திருமலையிலிருந்து வந்த ஸ்ரீவைணவர் திருமங்கை மன்னனுடைய பெரிய திருமொழி யில் திருவரங்கப் பதிகம் தாய்ப்பாசுரமான,

'சேலுகளும் வயல்புடைசூழ் திருவரங்கத் தம்மானைச் சிந்தை செய்த
நீலமலர்க் கண்மடவாள் நிறையழிவைத்தாய் 'மொழிந்த அதனை, நேரார்
காலவேல் பரகாலன் கலிகன்றி ஒலிமாலை கற்று வல்லார்
மாலை வேர் வெண்குடைக்கீழ் மன்னவராய்ப் பொன்னுலகில் வாழ்வர் தாமே''

திருவரங்கப் பாசுரம் (5-5-10) இதில் அமைந்துள்ள பதிகத்தின் முதற்பாடலை எடுத்தோதினார்.

திருவரங்கத்தை நினைத்துப் பிதற்றும் தலைவியின் பாடல் இது;

அரங்கன்படுத்திய பாட்டில், 'வேங்கடமே வேங்கடமே' என்று தலைவி அலறினாள்.

''வெருவாதாள்வாய்வெருவி வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால்
மருவாளால் என் குடங்கால் வாள் நெடுங்கண்துயில் மறந்தாள் வண்டார் கொண்டல்
உருவாளன் வானவர்தம் உயிராளன் ஒலி திரைநீர்ப் பௌவம் கொண்ட
திருவாளன் என் மகளைச் செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேனே!''

அணியரங்கமும், அப்பன் வேங்கடமும் ஒன்றுதான் என்று சமாதானம் அடைந்தாராம் பட்டர்.

திவ்யப்பிரபந்தத்தை அருளியவர்கள் திவ்யசூரிகளான ஆழ்வார்கள்.

திருவரங்கத்தில் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்னும்பெரும் புலவர் 'திவ்யகவி' என்று பெயர் பெற்றார். ஆழ்வார்களுடைய பாடல்களுக்கு ஈடாக இவர் பாடல்கள் அமைந்தன.

பிள்ளைப் பெருமாள் அய்யங்காருக்குத் திருவரங்கர் மீது மிகமிக ஈடுபாடு. இவர் பாடல்களின் சிறப்பால் சொக்கினார் திருவேங்கடவர். பிள்ளைப் பெருமாள் அய்யங்காருடைய கனவில் தோன்றித் திருவேங்கடவர், தம்மீதும் பாடல்கள் இயற்றும்படி வேண்டினாராம்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார், 'அரங்கனைப் பாடிய வாயினால் குரங்கனைப் பாடிடேன்' என்றாராம்.

திருவேங்கடவர் சினந்து விட்டார். பிள்ளைப் பெருமாள் அய்யங்காருக்குக் கண்டமாலை ஏற்பட்டுவிட்டது.

விண்ணவர் கோன் விரையார் பொழில் வேங்கடவன்தான் நீள்மதிள் அரங்கத்தமான் —என்றும், மந்திபாய் வடவேங்கட மாமலை, வானவர்கள் சந்தி செய்யநின்றான். அரங்கத்து அரவின் அணையான் என்றும்



திருப்பாணாழ்வார் பணித்தது கொண்டு மனந்தேறி, பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் திருவரங்கனுக்கு அளித்தது போலவே திருவேங்கடமுடையானுக்கும்' திருவேங்கடக் கலம்பகம்' 'திருவேங்கடத்து அந்தாதி' 'திருவேங்கட மாலை' 'உலா' முதலிய நூல்களை அருளவும், திருவேங்கடமுடையான் மிகவும் உவந்தருளி கண்டமாலையை நீக்கினார்.

திருவேங்கடமுடையான் மீது ஈடுபாடு கொண்டதன் சின்னமாகப் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும், திருவரங்கம் நம்பிள்ளை கோஷ்டிப் பிரகாரத்தில், சுதை சுண்ணாம்பு அமைப்பு வடிவில் பெரிய அளவில் திருவேங்கடவரை எழுந்தருள்வித்தார்.

இன்றும் இதைத் திருவரங்கத்தில் சேவிக்கலாம்.

மூன்று கைங்கரியங்களைப் பெரியோர்கள் சிறப்பித்துள்ளனர்.

வீணையும் கையுமாகத் திருப்பாணாழ்வார் திருவரங்கத்திலும், ஆலவட்டமும் கையுமாகத் திருக்கச்சி நம்பிகள் அருளாளன் திருமுன்பும், பணிப்பூவும் கையுமாகத் திருமலையில் குறும்பறுத்த நம்பியும் புரிந்த கைங்கரியங்கள் மிகச் சிறந்தன.

இவற்றுள் குறும்பறுத்த நம்பியின் திருப்பணிக்கு மிக்க ஏற்றமுண்டு.



திருப்பாணர் திருவரங்கன் திருமுன்பு சென்று வீணையும் கையுமாக அமலன் ஆதிப் பிரான் என்னும் பதிகம் அருளினார். திருக் கச்சி நம்பிகளும், காஞ்சியில் பேரருளாளன் திருமுன்பு ஆலவட்டக் கைங்கரியம் புரிந்தார்.

குறும்பறுத்த நம்பியோ, திருமலை மேல் ஏறவே இல்லை.

திருமலை அடிவாரத்திலேயே வாழ்ந்து, திருப்பணி செய்தார். மட்கலங்களைச் சுட்டு விற்றார். திருப்பாணாழ்வாரைப் போல் தென் மொழியிலோ, திருக்கச்சி நம்பிகளைப் போல் வடமொழியிலோ பாடல் இயற்றவும் இல்லை.

திருமலையில் திருக்கோயிலை ஏற்படுத் தின தொண்டைமான் சக்ரவர்த்தி ஒரு சமயம் திருவேங்கடமுடையானுக்குப் புட்ப கைங் கர்யம் சிறந்ததாயிற்றே என மிக விலை உயர்ந்த புட்பங்களைத் திரட்டி அணிவித்தார்.

தொண்டைமான் சக்ரவர்த்தியின் கனவிலே திருவேங்கடவர் எழுந்தருளினார்; தொண்டைமானும் தாம் சமர்ப்பித்த விலை உயர்ந்த புட்பங்கள் மணம் நிறைந்தனவாக இருந்தனவா எனத் திருவேங்கடவரைக் கேட்டார்.

திருவேங்கடவர் புன்னகை புரிந்தார் 'அந்தக் குயவன் சமர்ப்பித்த புட்பங்களின் மணம் மிக மிக அதிகமாக இருந்தது,' என்றார்.

தொண்டைமான் சக்ரவர்த்தி திடுக்கிட்டு எழுந்து மறுநாள், யார் அந்தக் குயவர் எனத் தேட ஏற்பாடுகள் செய்தார்.

திருமலை அடிவாரத்தில் ஒரு குயவர் தினமும் காலையில் மண்பாண்டங்கள் செய்யும் முன்பு, கொஞ்சம் களி மண்ணால் சிறு புட்பங்கள் செய்து அவைகளைத் தான் எதிரில் உள்ள திருவேங்கடவரின் திருவடியில் அர்ச்சித்துவிட்டு வேலை தொடங்குவாராம்.

(கையால் செய்வது பணி; இப்படிக் கையால் செய்யப்பட்ட களிமண் மலர் பணிப்பூ எனப்பட்டது) நம்பியின் திருக்கைகளால் அந்தக் களிமண்ணால் செய்யப்பட்ட மலர்கள் திருமலையில் திருவேங்கடவர் திருவடிகளில் பரிமளத்துடன் காணப்பட்டன. தொண்டமான் சக்ரவர்த்தி தம் கர்வத்திற்கு வெட்கப்பட்டார். சக்ரவர்த்தியினுடைய குறும்பை அறுத்தபடியால் இந்த பக்தருக்கு குறும்பறுத்த நம்பி எனப் பெயர் ஏற்பட்டு விட்டது.

திருவேங்கடவர், ஏழுமலைகளை விடப் பெரியவர், உயர்ந்தவர்.

அவன் ஈசன் வானவர்க்கு; ஆனால் அது தேசமில்லை திருவேங்கடத்தானுக்கு

நாம் நீசர்கள், நின்ற ஒன்றும் இல்லாத வர்கள் என்று பணிவுடன் குற்றேவல் புரிந் தால் அந்தப் பரஞ்சுடர்ச் சோதி நம் கண் பாசம் வைப்பார். இதுவே நம்மாழ்வாரின் உபதேசம்.

''ஈசன் வானவர்க்கு என்பன் என்றால்;
அது தேசமோ திருவேங்கடத்தானுக்கு:
நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன் எங்கண்
பாசம் வைத்த பரம்சுடர்ச்சோதிக்கே''

பெரியாழ்வார் பணித்தபடி, 'சென்னி யோங்கு' என்கிற மன அடக்கத்துடன் விண்ணும் மண்ணும் தொழும் படியும், உலகு தன்னை வாழ நிற்கும்படியும் எழுந்தருளியுள்ள திருவேங்கடத்தானைப் பணிவோமாக.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. சென்னை-600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ. பிஎச்.டி.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம். அரசினர் தோட்டம். சென்னை-600002.



வடபழநி அருள்மிகு வடபழநியாண்டவர் ஆலயத்தில் வைகாசி விசாக விழா சிறப்புறக் கொண்டாடப்பட்டது. ஸ்ரீரங்கம் நாட்டியக் குழுவினர் ''கந்தன் பெருமை'' எனும் நாட்டிய நிகழ்ச்சியைச் சிறப்புற நிகழ்த்தினர்.

பதிவு எண். எம். 7039



மன்னார்குடி அருள்மிகு இராஜகோபால சுவாமி ஆலயத் திருக்குட நீராட்டு விழா அண்மையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவி அவர்கள் இவ்விழாவிற்கு வருகை தந்து சிறப்பித்தார்கள். மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு நடேசன் பால்ராஜ் அவர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டார்கள்.